பிப்ரவரி 25ல்
ஆரம்பமாகிறது

# வேலைக்காரி

உயரிய கருத்துக்களுடன்
உன்னதமாய் தயாரிக்கப்பட்ட
உல்லாச வாழ்க்கைச்
சித்திரம்

கதை. வசனம்
ஸி.என்.அண்ணாதுரை

டைரக்ஷன்
ஏ.எஸ்.ஏ.சாமி

ஸ்டுடியோ
சென்ட்ரல்

ஜுபிடர் தயாரிப்பு



நாளுக்கு நாள்
உங்கள் சருமம்
அதிக அழகைப்
பெறுகிறது

ரெக்ஸோனாவிலிருக்கும் கேடில்தான்
உங்கள் சருமத்தை அதிக ஆரோக்கியமுடையதாகவும்,
மாசற்றதாகவும், மழுமழுப்பாகவும் செய்கிறது.

தினமும் குறைந்த பக்ஷம் இரு முறையாவது ரெக்ஸோனா உபயோகிக்க ஆரம்பியுங்கள். அதன் கேடில் அடங்கிய நுரையை மெதுவாக சருமத்தில் தேய்த்து கழுவுங்கள். ரெக்ஸோனாவிலிருக்கும் கேடில் உங்கள் சருமத்திற்கு புது ஆரோக்கியத்தை அளிக்கும். மேலும் சருமத்தை சுத்தம் செய்து மழுமழுப்பளித்து என்றும் திகழும் புதிய எழிலையும் தரும்.




# ரெக்ஸோனா

கேடில் கலந்த சோப் இது ஒன்றே

RP. 47-178 TM

# சருமத்தடிப்பு சொஸ்தமாகிறது



"சருமத்தடிப்பு, எக்ஸிமா, முதலிய நோய்களுக்கு நான் சிகிச்சை செய்திருக்கிறேன். ஒவ்வொன்றும் வெல்டர்மாவுக்குப் பணிந்தன."

—N. E. (நர்ஸ்)

## வழவழப்பானது, பிசுக்கற்றது

முதல் தடவையாக சருமத்தின்மேல் வல்டெர்மாவைத் தடவிய வுடனேயே அதிலிருக்கும் இருவித சக்திகளும்—வேலை செய்வதை நீங்களே உணர்வீர்கள். இந்த இருவித சக்திகளில் ஒவ்வொன்றும் பலவித கொடிய கிருமிகளுக்குச் சத்துரு—அநேகவித சரும வியாதிகளுக்கும் மூலகாரணமாகும் கிருமிகளையும் அடியோடு அழித்து விடுகிறது.

எரிச்சல், வேக்காடு அடங்குகிறது. சருமம் மறுபடியும் சுத்தமாகவும், சுகமாகவும், ஆரோக்ய மடைகிறது. எக்ஸிமா, கொப்புளங்கள், வேக்காடுகள், பருக்கள் மற்றும் சருமத்திற்கு அடியில் ஏற்படும் இதர ரோகங்களெல்லாம் சொஸ்தமாகின்றன.

வேறென்ன இருக்கிறது. நீரில்—எண்ணெய் சேர்க்கை என்னும் புதுமையை அடிப்படையாகக் கொண்டு தயார்செய்யப்பட்ட வெல்டர்மா—நோய்கண்ட சருமத்திலுள்ள விஷத்தை வெளியேற்றுவதோடு மீண்டும் நோய் தொத்திவிடாமல் தடுக்கிறது. சரும வைத்திய நிபுணர்களால் பரிசீலனை செய்யப்பட்டது. வல்டெர்மா, கறை உண்டாக்காது. பூசின இடத்தில் புலனாகாது. எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் உபயோகப் படுத்தலாம்.

இந்தியாவின் பூரண விநியோகஸ்தர்கள்
ஜியாப்ரே மானர்ஸ் அண் கோ., லிமிடெட்
பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்




DOUBLE-ANTISEPTIC
**Valderma**
THE *Non-Greasy* BALM

V. 3

# கல்கி பொருளடக்கம்

மலர் 8
இதழ் 29

பிப்ரவரி 13

சர்வதாரி ௵
மாசி 2



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 29

# என்ன செய்தி?

## ஆண்டவனாலும் முடியாது!

அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் அத்தியந்த நட்பு ஏற்படும்படி செய்யலாம்! அராபியர்களும் யூதர்களும் அன்னியோன்னியமாக வாழும்படி செய்யலாம்! ஆந்திர மாகாணம் ஏற்படுவதற்காக ஆந்திரர்கள் சிறிது காலம் காத்திருக்கும்படியும் செய்து விடலாம்! ஆனால், சென்னை முஸ்லிம் லீகர்கள் மாத்திரம் தனித் தொகுதி முறையைக் கைவிடும்படி செய்வது ஆண்டவனாலும் முடியாத காரியம் என்று தோன்றுகிறது! இந்தியர்களிடையே ஒற்றுமையைக் குலைத்து இந்தியாவின் அரசியல் வாழ்க்கையைக் குட்டிச் சுவராக்கியது தனித் தொகுதி முறைதான். பிரிட்டிஷார் எத்தனையோ கொடிய அடக்கு முறைகளாலும் சாதிக்க முடியாத காரியத்தைத் தனித் தொகுதி முறை ஒன்றைக் கொண்டு சாதித்து விட்டார்கள். பாரத நாடு பிளக்கப்பட்டதும், அதன்பின் பல்லாயிரக் கணக்கான மக்கள் பலியானதும் தனித் தொகுதி முறையின் விளைவுகளே.

முன்னர் அந்த முறையில் நம்பிக்கை வைத்திருந்த ஓரிரு முஸ்லிம் பிரமுகர்கள்கூட, அந்தப் பாழும் தனித் தொகுதி முறையை இனி எக்காலத்திலும் தலைகாட்ட விடாதீர்கள் என்று இந்திய அரசியல் நிர்ணய சபையில் கேட்டுக்கொண்டனர். மற்றும் ஏராளமான முஸ்லிம் லீகர்கள் காங்கிரஸ் மகா சபையில் சேருவதன் மூலம் தனித் தொகுதி முறையில் தங்களுக்கு ஏற்பட்டுள்ள மன மாற்றத்தைக் காட்டியிருக்கிறார்கள். அப்படியிருக்க, தனித்தொகுதி முறையை ஒழிக்க அரசியல் நிர்ணய சபை தீர்மானித்ததைக் குறித்து ஓலமிட்டு சென்னை முஸ்லிம் லீகர்கள் ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருப்பது ஆச்சரியமாக இருக்கிறது. முஸ்லிம் லீகர்கள் காங்கிரஸில் சேர்ந்து வரும் இச் சமயத்தில் சென்னை லீகர்கள் மாத்திரம் கேரள முஸ்லிம் லீக் ஒன்றை அமைக்கத் திட்டம் போட்டிருப்பது அதைவிட ஆச்சரியமாக இருக்கிறது. வகுப்பு வெறியை அடிப்படையாகக் கொண்டு சிருஷ்டிக்கப்பட்ட பாகிஸ்தான்கூட மனமாற்றம் அடைந்து இந்தியாவின் நட்பை நாடிவருகிறது. ஆனால், சென்னை லீகர்களின் மனம் மாத்திரம் இன்னும் பழைய பாதையில் சென்று வருவது மிகவும் வருந்தத்தக்கது.

## ஊழல் மயம்!

முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்! சென்ற மகா யுத்தத்தின்போது காங்கிரஸ் மந்திரிகள் ராஜிநாமா செய்ததும், காங்கிரஸ் மந்திரிகளிடமிருந்து முஸ்லிம்கள் விடுதலை அடைந்ததாகக் கூறி லீகர்கள் "விடுதலை தினம்" கொண்டாடியதும் ஞாபகமிருக்கலாம். பாகிஸ்தான் இயக்கத்தின் தூண்களும் மேற்கு பஞ்சாப் மந்திரிகளுமான மாம்தாத் நவாப் கோஷ்டியினர் சமீபத்தில் லஞ்ச ஊழல் காரணமாக அந்த மாகாண கவர்னரால் 'டிஸ்மிஸ்' செய்யப்பட்டனர் அல்லவா? அத்தகைய பேர்வழிகள் பொறுப்புள்ள ஸ்தானங்களிலிருந்து தொலைந்ததற்காக மேற்கு பஞ்சாப் முழுதும் விடுதலை தினம் கொண்டாடியது! அந்தக் கொண்டாட்டத்தில் பத்திரிகைகளும் பொது ஜனங்களும் மாணவர்களும் உற்சாகத்துடன் கலந்து கொண்டார்கள். இப்போது அதே காரணத்துக்காகப் பாகிஸ்தானைச் சேர்ந்த மற்றொரு மாகாணமான சிந்துவின் பிரதம மந்திரி பீர் இல்லாஹி பக்ஷ் தம் பதவியை ராஜிநாமா செய்துள்ளார்.

சில மாதங்களுக்கு முன் நிர்வாக ஊழல்கள் காரணமாக குர்ரோ பிரதம மந்திரி பதவியிலிருந்து டிஸ்மிஸ் செய்யப்பட்டபோது, பீர் இல்லாஹி பக்ஷ் அந்தப் பதவியை ஏற்றுக் கொண்டார். லஞ்ச ஊழலில் தாம் குர்ரோவுக்கு எந்த



சென்ற வாரத்தில் சென்னைக்கு விஜயம் செய்திருந்த இந்திய சேநாதிபதி ஸ்ரீ காரியப்பா அவர்களுக்கு சென்னை நகர சபையின் சார்பாக மேயர் ஸ்ரீ ராமசாமி நாயுடு உபசாரப்பத்திரம் படித்தளித்தார். உபசாரப்பத்திரம், பீரங்கியின் வடிவத்தில் செய்த வேலைப்பாடமைந்த வெள்ளிப் பேழையில் வைத்துக் கொடுக்கப்பட்டது.

விதத்திலும் சளைத்தவர் இல்லை என்பதை இப்போது இல்லாஹி பக்ஷ் நிரூபித்துவிட்டார். சிந்து சர்க்கார் இல்லாஹி பக்ஷைப் பதவியிலிருந்து விலக்கியதுடன், அவர் இன்னும் ஆறு வருஷ காலத்துக்கு அஸெம்பிளி அங்கத்தினராக இருக்கவும், வாக்காளராக இருக்கவும்கூடத் தகுதியற்றவர் என்று அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள். வோட்டுரிமை பெறுவதற்குக்கூடத் தகுதியற்றவர் என்று தீர்மானிக்க வேண்டுமாயின், இல்லாஹி பக்ஷ் எவ்வளவு பொல்லாத குற்றம் செய்திருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். குளிர்ந்த நிழலின் அருமை கடும் வெய்யிலில் சென்றால்தான் தெரியும். அதுபோல, மேற்படி பேர்வழிகளைப் பார்க்கும்போதுதான் நமது மாபெரும் தலைவர்களின் மாசற்ற அருமை பெருமைகள் குன்றின் மேலிட்ட தீபம் போல் பிரகாசிக்கின்றன.

## மன்னர்களின் துறவு

பிரபல இந்திய சமஸ்தானங்களில் ஒன்றும், 8200 சதுர மைல் விஸ்தீரணமும் முப்பது லட்சம் ஜனத்தொகையும் நாலு கோடி ரூபாய்க்கு மேல் வருஷ வருமானமும் உள்ள பரோடாவும், சுமார் 3500 சதுர மைல் விஸ்தீரணமும் பதினைந்து லட்சம் ஜனத்தொகையும் ஒரு கோடி ரூபாய்க்கு மேல் வருமானமும் உள்ள கோல்ஹாபூரும் பம்பாய் மாகாணத்தில் சேர்ந்துவிடத் தீர்மானித்திருக்கின்றன. அவ்வாறு சேர்ந்து ஐக்கிய இந்தியாவை பலப்படுத்த முன் வந்துள்ள பரோடா, கோல்ஹாபூர் மகாராஜாக்களின் தியாகத்தை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். சிதறிக் கிடந்த நூற்றுக் கணக்கான சமஸ்தானங்களை ஒன்றுசேர்த்த பெருமை சர்தார் வல்லபாய் பட்டேலுக்கு உரியதென்றாலும், அவரது அரிய ஆலோசனைகளுக்கு இணங்கி இந்தியாவின் ஐக்கியத்தை நிலைநிறுத்த உதவி புரிந்ததன் மூலம் இந்திய மன்னர்கள் தங்களுடைய தேசபக்தியையும் தியாக புத்தியையும் உலகமறிய நிரூபித்திருக்கிறார்கள்.

அற்ப வசதிகளைப் பெறுவதற்காகச் சுதந்திர சர்க்காரைத் தூற்றவும் சர்க்கார் நிர்வாகத்துக்கும் பொது ஜனங்களுக்கும் தீராத் தொல்லையைக் கொடுக்கவும் தயங்காத பேர்வழிகள் இருக்கு

வரும் இக்காலத்தில், கோடிக் கணக்கான வருமானமும் எல்லையற்ற அதிகாரமும் உள்ள ராஜ்யங்களையே துறக்க முன்வந்த மண்டலாதிபதிகளைப் புகழ்ந்து பாராட்டுவதில் என்ன தவறு? அத்தகைய தியாகிகளான மன்னர்களுக்கு இந்திய மக்கள் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்று சர்தார் பட்டேல் அடிக்கடி கூறுவதன் கருத்து அதுதான். அதிலும் பரோடா, கோல்ஹாபூர் சமஸ்தானாதிபதிகளின் இணையற்ற பெருந்தன்மை பொருந்திய செய்கை, மற்றெல்லா மன்னர்களின் தியாகத்துக்குச் சிகரம் போன்றது என்பதில் ஐயமில்லை.

## போற்றுகிறோம்

உலகம் தோன்றிய காலம் முதல் துர்மந்திரிகளால் சீரழிந்த மன்னர்களின் தொகை எண்ணில் அடங்காது. துராலோசகர்கள் இருந்திராவிடில் இராமாயணமும் மகாபாரதமும் கூட ஏற்பட்டிராது. துஷ்ட மந்திரிகளின் வார்த்தைகளுக்குச் செவி மடுப்பதால் எவ்வளவு விபரீதம் ஏற்படக்கூடும் என்பதை இந்திய மன்னர்கள் நிதரிசனமாக அறிந்து கொண்டு விட்டார்கள். அதற்கு மாறாக சர்தார் பட்டேலின் சீரிய யோசனைகளைச் சிரமேற்கொண்டு நடந்த மன்னர்கள் சீரும் சிறப்பும் பெற்று, சரித்திரத்தில் புகழிடம் பெறும் மகத்தான கௌரவத்தையும் அடைந்திருக்கிறார்கள். உதாரணமாக நிஜாமின் செல்வத்தைக் கொள்ளையிட்ட துர்மந்திரிகளின் மூலம் அவருக்குக் கஷ்டங்களே ஏற்பட்டன. ஆனால் இப்போது நிஜாம் சுமார் மூன்று கோடி ரூபாய் வருஷ வருமான முள்ள தமது சொந்த நிலங்களை நிரந்தரமாகச் சர்க்கார் நிர்வாகத்தில் விட்டுவிடத் தீர்மானித்திருப்பதன் மூலம் தமக்குப் பெருமையைத் தேடிக் கொண்டிருப்பதுடன். பொது உடைமைக்காரர்களின் துஷ்பிரசாரத்துக்கும் சரியான பதில் கொடுத்திருக்கிறார். நிஜாமின் போற்றத் தக்க மேற்படி அரிய செய்கையை ஜமீன்தார்களும் ஜாகிர்தார்களும் பின்பற்றுவராயின் எவ்வளவு கண்ணியமாக இருக்கும்!

## தனக்கொன்று........

“என் வீட்டுக்கு வந்தால் என்ன கொண்டு வருகிறாய்? உன் வீட்டுக்கு வந்தால் என்ன தருகிறாய்?” என்றொரு பேர் வழி. ஐக்கிய கேரள வாதிகளின் வாதம் அவ்விதமாகவே இருக்கிறது. ஆல்வேயில் நடந்த ஐக்கிய கேரள மகாநாட்டுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ கே. கேளப்பன் ஐக்கிய கேரள மாகாணம் உடனே ஏற்படவேண்டும் என்று வற்புறுத்தியிருக்கிறார். புதிய அரசியல் திட்டம் அமுலுக்கு வருமுன் ஐக்கிய கேரளம் ஏற்பட்டு விடவேண்டுமாம். அந்த மாகாணத்தில் நீலகிரி, குடகு, தென் கன்னடப் பிரதேசங்களும் சேர வேண்டுமாம். மேற்படி பிரதேசங்கள் ஐக்கிய கேரள மாகாணத்தில் சேர வேண்டும் என்பதற்கு ஸ்ரீ கேளப்பன் கூறும் காரணங்கள், சென்னை நகரம் ஆந்திர மாகாணத்தில் சேரவேண்டும் என்பதற்கு ஆந்திரர்கள் கூறும் காரணங்களைவிட மோசமாக இருக்கின்றன. மேற்கொண்டு சில பிரதேசங்களின் மீதும் கண்ணோட்டம் செலுத்தும் கேரள வாதிகள், தமிழர்கள் வசிக்கும் நாஞ்சில் நாடு தமிழ் நாட்டைச் சேரவேண்டும் என்ற கோரிக்கையை ஆதரிக்க முடியாது என்று கூறியிருப்பது இரட்டிப்பு அநீதியாகும். தமிழ் நாட்டுக்கும் நாஞ்சில் நாட்டுக்கும் இடையே மலை இருக்கிறதாம். கேரள வாசிகள் தங்களுடைய உணவுக்கு நாஞ்சில் நாட்டையே நாடி நிற்கிறார்களாம். அதனால் நாஞ்சில் நாடு கேரள மாகாணத்தின் ஒரு பகுதியாகவே இருக்க வேண்டும் என்பது கேளப்பன் கோஷ்டியினரின் வாதம்.

## இடையூறு செய்யாதீர்

இந்தியாவுக்கும் அந்தமானுக்கும் இடையே நூற்றுக்கணக்கான மைல் சமுத்திரம் இருக்கிறது என்பதற்காக அந்தமான் இந்தியாவுடன் சேருவதற்கில்லை என்று பிரிட்டிஷார் கூடச் சொல்லவில்லை. எனவே, ஒரு சிறிய மலை குறுக்காக நிற்கிறது என்பதற்காக நாஞ்சில் நாட்டு மக்களின் சுய நிர்ணய உரிமையை மறுப்பது நீதியாகாது. நாஞ்சில் நாட்டிலுள்ள தமிழர்கள் மலையாளம் பேசுகிறார்கள் என்பதும் அவர்களுடைய வாதங்களில் ஒன்று. மலையாளம் பேசும் தமிழர்களைக் காட்டிலும் தமிழ் பேசும் மலையாளிகள்தான் அதிகமாக இருப்பர். அதற்காக அவர்கள் வசிக்கும் பிரதேசங்கள் தமிழ் மாகாணத்துடன் சேர வேண்டும் என்று சொல்லி விடலாமா? கேரளத்தின் உணவுக் கஷ்டத்தை நிவர்த்திக்கும் பொறுப்பை இந்தியா முழுதும் ஏற்றுக் கொண்டு வரும்போது, அவ்விஷயமாகவும் அவர்கள் கூறியுள்ள வாதம் பொருந்தாது. எனவே, தங்களிடையே ஐக்கியத்தை விரும்பும் மலையாளிகள் தமிழர்களிடையே ஐக்கியம் ஏற்படுவதற்கு ஏன் இடையூறு செய்ய வேண்டும்?

# நிகழ்ச்சிச் சித்திரம்









-சாஸ்திரி




இந்தோனேஷியாவில் பிரம்மரிஷி டச்சுப் பிரதமர் டிரீஸ் ஐக்ய தேச சபையின் மன மாற்றத்துக்காகக் கண் மூடி மௌனியாக உண்ணாவிரதம் இருக்கிறார்.





சீனாவின் அதி சியாங்காய்ஷேக் அஞ்ஞாத வாசத்தில் கட்டாய உபவாசத்தை மேற்கொள்கிறார்.




பாகிஸ்தானில் உத்தியோகம் இழந்த மாஜி மந்திரிகள் லியாகத் அலிகானின் இரும்பு நெஞ்சை உருக்குவதற்காக. உண்ணாவிரதம் இருக்கிறார்கள்.
மந்திரி வேலையைத் திருப்பிக் கொடுங்கள்.
மந்திரி வேலையைத் திருப்பிக் கொடுங்கள்.




இந்தியா தேசத்தில் கருப்பு மார்க்கெட் முதலாளி இன்கம் டாக்ஸ் சட்டத்தை எதிர்த்துக் கடுமையான உபவாச விரதத்தை மேற்கொண்டிருக்கிறார்.
என்ன சுவாமி! தண்ணீர் கூட அருந்த மாட்டீர்களோ?



# கப்பல் ஓட்டுவோம்! கடலைத் தாண்டுவோம்!

நீலக் கடலும் நீல வானமும் கலந்து உறவாடும் இடத்தில் ஒரு புகைப் படலம் தோன்றுகிறது. கீழ்த் திசையிலிருந்து 'குப்' என்று ஒரு காற்று வந்து அடித்ததும் புகைப் படலம் மறைகிறது. புகைப் படலம் இருந்த இடத்தில் ஒரு அழகிய பழைய காலத்து மரக்கலம் தெரிகிறது. புலிக் கொடி பறக்கும் அந்தக் கப்பலிலே நெஞ்சில் உரங் கொண்ட வீர மாலுமிகள் பலர் நிற்கிறார்கள். அவர்களிலே நடுநாயகமாகக் கம்பீரத் தோற்றத்துடனே நிற்பவர் கங்கையும் கடாரமும் கொண்ட சோழ சக்கரவர்த்தி ராஜேந்திரர். அந்த மன்னாதி மன்னரும் மற்ற மாலுமிகளும் மனமகிழ்ந்திருக்கிறார்கள் என்பதை அவர்களுடைய முகமலர்ச்சி அறிவிக்கிறது. அவர்களுடைய கரங்கள் பொழியும் மலர் மாரியினால் வான வெளியெல்லாம் பூ மயமாக விளங்குகிறது. அத்தகைய அவர்களுடைய குதூகலத்துக்குக் காரணம், கடற்கரையோரமாக இந்திய சுதந்திரக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டு மிதக்கும் இந்தக் காலத்து நீராவிக் கப்பல் ஒன்றுதான் என்பதைக் காண்கிறோம்.

இங்கே, அலைகடலின் கரையோரத்தில் ஆயிரமாயிரம் தமிழ் மக்கள்,— தற்காலத்தவர்கள், — கடல் மணலும் கடல் நீரும் மறையும்படி நெருங்கிக் கூட்டமாக நிற்கிறார்கள். அவர்கள் அனைவருடைய கண்களும் கடலோரத்திலிருந்து சற்றுத் தூரத்தில் மிதக்கும் நீராவிக் கப்பல் மீதே சென்றிருக்கிறது. "ஜே ஹிந்த்" என்றும், "வந்தே மாதரம்" என்றும், "வ. உ. சிதம்பரனார் வாழ்க!" என்றும் அந்த ஆயிரம் பதினாயிரம் லட்சம் ஜனங்களின் கண்டங்கள் கோஷம் செய்கின்றன. தற்காலத் தமிழர்கள் இடும் ஜயகோஷத்தின் பிரதித்வனியே போல் ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய வீரத் தமிழ் மாலுமிகளின் ஜயகோஷமும் கிளம்பித் திக்குத் திகந்தங்களிலெல்லாம் பரவி வான முகட்டிலே சென்று முட்டி மோதி எதிரொலி செய்கின்றன.

இப்படிப் பண்டைத் தமிழ் மக்களின் உற்சாகத்துக்கும் இந்தக் காலத் தமிழர்களின் குதூகலத்துக்கும் ஒரே சமயத்தில் காரணமாயிருந்த மகத்தான வைபவம் நாளது பிப்ரவரி மீ 9௳ புதன்கிழமையன்று தூத்துக்குடியில் நடந்தது. "வ. உ. சிதம்பரம்" என்னும் பெயர் தாங்கிய வர்த்தக நீராவிக் கப்பலை மேன்மை தங்கிய இந்தியாவின் கவர்னர் ஜனரலும் நமது செந்தமிழ் நாட்டின் அருமைத் தலைவருமான ராஜாஜி அவர்கள் கடலில் செலுத்தினார். "வ. உ. சிதம்பரம்" கப்பல் தூத்துக்குடிக்கும் இலங்கைத் தீவுக்கும் இடையே தன்னுடைய வர்த்தகப் பெருக்கப் பிரயாணத்தை இனிது தொடங்கியது.

* * *

பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்பே தமிழர்கள் கப்பல் ஏறிக் கடல் கடந்து சென்று வாணிபம் செய்தார்கள். தமிழ் நாட்டில் கட்டிய கப்பல்களைத் தமிழ் மாலுமிகள் செலுத்தி எல்லையற்ற அகண்டமான சமுத்திரத்தில் நெஞ்சுத் துணிவுடன் சென்றார்கள். தூர தூர தேசங்களுக்குச் சென்று வாணிபம் செய்வதுடன் அவர்கள் நின்றுவிடவில்லை. சிங்களம், புட்பகம் சாவகம் முதலிய தீவுகளைக் கைப்பற்றிக் குடியேறி ஆட்சி செலுத்தினார்கள். ஆட்சி செலுத்திய பிரதேசங்களில் எல்லாம் தமிழ் நாட்டின் பண்பாட்டையும் தமிழர்கள் போற்றிய சைவ வைணவ சமயக் கோட்பாடுகளையும் பரப்பினார்கள். கோயில்களும் கோபுரங்களும் கட்டினார்கள். மக்களுக்கு நன்மையான ஆட்சி முறையைக் கடைப் பிடித்தார்கள். காஞ்சி பல்லவர்களின் காலத்திலும் தஞ்சை சோழர்களின் காலத்திலும் தமிழர்களின் கப்பல் தொழிலும் கடல் வாணிபமும் கடற்படை வலிமையும் சிகரமான நிலையை அடைந்திருந்தன.

* * *

சோழர்களின் காலத்துக்குப் பிறகு ஆயிரம் வருஷம் ஆயிற்று. தமிழ் நாடு பண்டைப் பெருமையை இழந்

தது. எல்லாத் துறைகளிலும் இருள் சூழ்ந்திருந்தது. ஆகவே, "இருள் அடைந்த நாடு" என்று இதை வட நாட்டாரும் மேனாட்டாரும் கூறினார்கள்.

இருளைப் போக்கி ஒளியைப் பரப்ப இருவர் வந்தார்கள். தமிழ் நாட்டுக்குப் புத்துயிர் தந்தார்கள். தமிழ் மக்களுக்குச் சுதந்திர தாகத்தையும் தேசிய வெறியையும் ஊட்டினார்கள்.

இவ்விருவரில் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் கர்மயோகியாவார். தேச பக்தியைப் பற்றி வாயளவில் பேசிவிட்டு அவர் சொந்தக் காரியத்தைப் பார்த்துக் கொண்டிருந்து விடவில்லை. தேச விடுதலைக்கும் தேச முன்னேற்றத்துக்கும் ஆன திருப்பணிகள் எத்தனையோ செய்தார். எல்லாவற்றுக்கும் மேலாகத் தூத்துக்குடிக்கும் இலங்கைக்கும் இடையே கப்பல் ஓட்ட முயன்றார். அந்த முயற்சியில் தம்முடைய சொத்தை இழந்தார்; சுதந்திரத்தையும் இழந்தார்.

தூத்துக்குடிக்கும் இலங்கைக்கும் கப்பல்விட்ட வெள்ளைக் கம்பெனியார் ஸ்ரீ வ. உ. சிதம்பரனார் முயற்சியை விரோதித்தார்கள். அவர்களுடைய முயற்சியால் ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை கைதியானார். கைதி செய்ததற்கு வியாஜம் ஸ்ரீ சுப்பிரமணிய சிவாவின் பிரசங்கத்துக்குத் தலைமை வகித்ததும் "வந்தேமாதரம்" என்று ஜனங்களைக் கோஷிக்கச் சொன்னதுந்தான். இந்தக் குற்றங்களுக்காக இரண்டு தீவாந்தர சிட்சை விதிக்கப்பட்டார். ஹைக் கோர்ட்டில் புண்ணியவான்களான நீதிபதிகள் ஆறு வருஷச் சிறைத் தண்டனையாகக் குறைத்தார்கள்.

அந்த ஆறு வருஷம் சிறைவாசத்தில் ஸ்ரீ வ. உ. சிதம்பரனார் அநுபவித்த கஷ்டங்களுக்கு அளவேயில்லை. சிறை அதிகாரிகள் அவரைச் செக்கு இழுக்கும் படியும் செய்தார்கள்.

ஸ்ரீ வ. உ. சிதம்பரனார் சிறைப்பட்ட பிறகு அவர் ஆரம்பித்த கப்பல்கம்பெனி அடியோடு முழுகிப்போய்விட்டது.

* * *

கவியரசர் பாரதியாரின் தேசிய வெறியையும் கவிதா சக்தியையும் தூண்டி விடுவதற்கு ஸ்ரீ வ. உ. சிதம்பரனாரின் வாழ்க்கைச் சம்பவங்களே காரணமாக அமைந்தன.

தேச பக்தனைப் பார்த்து ஆங்கிலேயன் "கப்பல் ஏறுவாயோ? அடிமை! கடலைத் தாண்டுவாயோ?" என்று கேட்டதாகப் பாரதியார் பாடியதும்,

"சதையைத்துண்டு துண்டாக்கினும்
உன் எண்ணம் சாயுமோ?"

என்று தேச பக்தன் கூறியதாகப் பாடியதும் ஸ்ரீ வ. உ. சி. யை மனதில் வைத்துக் கொண்டுதான்.

"மேலோர்கள் வெஞ்சிறையில்
வீழ்ந்து கிடப்பதுவும்
நூலோர்கள் செக்கடியில்
நோவதுவும் காண்கிலையோ?"

என்று பாரதியார் பாட்டிலே அலறியது ஸ்ரீ வ. உ. சிதம்பரனாரைப் பற்றித்தான் என்பது தெளிவாகும்.

நாற்பது வருஷம் சென்றுவிட்டது. அப்போது அடிமைப் பட்டிருந்த இந்தியா தேசம் இன்று பூரண சுதந்திரம் பெற்று விளங்குகிறது.

தமிழ் நாட்டுக்குத் தேசிய உயிர் அளித்த ஸ்ரீ வ. உ. சிதம்பரனாரின் நினைவைப் போற்ற வேண்டும் என்று தேச பக்தர்கள் கருதினார்கள். அவர்களுடைய ஆசையை யெல்லாம் ராஜாஜி தம்முடைய அருமையான யோசனையின் மூலம் வெளியிட்டார். "வ. உ. சிதம்பரம்" என்று பெயர் தாங்கிய கப்பல் விடவேண்டும் என்றார்.

தமிழ் மக்களின் மனோரதமும் ராஜாஜியின் திருவாக்கும் சென்ற 9 உ நிறைவேறியது. ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளையின் கனவு நனவாகியது.

தூத்துக்குடிக்கும் கொழும்புக்கும் கப்பல் விட்ட வெள்ளைக்கார கம்பெனியார் கடையைக் கட்டிவிட்டார்கள்.

அதன்பேரில் தூத்துக்குடி தேச பக்தர்கள்,—எம். சி. வீரபாகுப் பிள்ளை முதலியோர்—கப்பல் கம்பெனி ஒன்று ஆரம்பித்திருக்கிறார்கள். அக் கம்பெனிக்கு சென்னை மாகாண சர்க்கார் தாராளமாகப் பல லட்சம் ரூபாய் கடன் கொடுத்து உதவியிருக்கிறார்கள்.

கம்பெனியார் தாங்கள் விடும் முதல் கப்பலுக்கு வ. உ. சிதம்பரம் என்று பொருத்தமான பெயரிட்டார்கள். அதை வெள்ளோட்டம் விடுவதற்கு ராஜாஜியையும் கொண்டு வந்தார்கள். வைபவமும் மிகச் சிறப்பாக நடந்தது. நடப்பதற்குக் கேட்பானேன்?

ஸ்ரீ வ. உ. சிதம்பரனாரின் புனித ஞாபகத்தைப் போற்றுகிறோம். தூத்துக்குடியைச் சேர்ந்த ஸ்ரீ எம். சி. வீரபாகு முதலிய தேச பக்தர்களை வாழ்த்திப் பாராட்டுகிறோம். சென்னை சர்க்காருடைய உதவிக்காக நன்றி செலுத்துகிறோம். ராஜாஜிக்குத் தமிழ் மக்களின் இருதயம் நிறைந்த அன்பைக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கிறோம்.

# அவர் பாக்கியவான்

பிறக்கும் போதே பாக்கியவானாகப் பிறந்தவர் காஸரேத் பேட்டை ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் அவர்கள். வாழ்க்கையில் சகல துறைகளிலும் அவர் பாக்கியவானாக இருந்தார். அருமையான உறவினரையும் நண்பர்களையும் பெற்றிருந்தார். பெரிய நிலச்சுவான்தாரா யிருந்தும் குடிபடைகளின் அன்பையும் மரியாதையையும் பெற்றிருந்தார். பி. ஏ. பட்டதாரியா யிருந்தும் சர்க்கார் உத்தியோகத்தைத் தேடிப் போகாத மனோதிடம் பெற்றிருந்தார். அரசியல் வாழ்க்கையில் ஈடுபட்ட ஆரம்ப காலத்திலேயே 'பிடித்தாலும் புளியங் கொம்பை பிடிக்க வேண்டும்' என்பதை யொட்டி இந்தியாவின் மாபெரும் அரசியல் ஸ்தாபனமாகிய காங்கிரஸ் மகா சபையில் சேர்ந்து விட்டார்.

காங்கிரஸ் மகாசபையில் சேர்ந்த பிறகு ஒரு தடவையாவது அப்பால் இப்பால் திரும்பாமல், ஒரு கணமாவது மனம் சலிக்க இடங் கொடாமல், அந்த மகா சபையின் திட்டங்களை ஒரே உறுதியாகக் கடைப் பிடித்து வந்தார். கோயில் குளங்களில் அளவில்லாத நம்பிக்கையும் சமய வெளித் தோற்றங்களில் மிகுந்த பற்றும் உள்ள பரமபக்த வைஷ்ணவரானாலும் தீண்டாமையை ஒழிக்கும் துறையில் முன்னணியில் நின்று தொண்டு செய்தார். நல்ல சங்கீத ரஸிகரா யிருந்தாலும் தமிழிசையில் பற்றுக் கொண்டிருந்தார். மாகாண சட்டசபைகளுக்கோ இந்தியா சட்டசபைக்கோ தேர்தலுக்கு நின்ற போதெல்லாம் பெருமிதமான வெற்றி யடைந்தார். கடைசியாக ஒரு தடவை சென்னைச் சட்டசபைக் காங்கிரஸ் கட்சித் தலைமைக்கு நின்றபோது தோல்வியும் அடைந்தார். முந்தைய சட்டசபை வெற்றிகள் அவரைப் பாக்கியவான் என்று நிரூபித்தது போலவே இந்தக் கட்சித் தலைமைத் தோல்வியும் அவரைச் சிறந்த பாக்கியவான் என்று நிரூபித்தது! (கட்சித் தலைமைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள் படும் அவஸ்தைகளை யெல்லாம் நாம் பார்த்து வருகிறோம் அன்றோ?)

தேசபக்தர் ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் தமது மரணத்திலும் பாக்கியசாலி ஆனார். நீண்டகாலமாக இருதய நோய்க்கு ஆளாகியிருந்தவர், அதைப் பொருட்படுத்தாமல் பலவித தேசிய கைங்கரியங்களில் ஈடுபட்டுக் கொண்டிருந்தும், இந்தியா சுதந்திரம் அடைந்த வைபவத்தைத் கண்ணாரக் கண்டு களித்துவிட்டே இந்த உலக வாழ்வை நீத்தார்!

பேட்டை முதலியார் ஒரு சமயம் தமது அரசியல் தலைவராக ஏற்றுக்கொண்டிருந்த ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்காருக்கு மேற்கூறிய பாக்கியம் கிடைக்கவில்லை.

அவருடைய அருமை நண்பரான தீரர் சத்தியமூர்த்தி அவர்களுக்கும் அந்தப் பேறு கிட்டவில்லை.

ஆனால் ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியாருக்குச் சுதந்திர இந்தியாவைப் பார்த்துவிட்டுக் காலமாகும் பாக்கியம் கொடுத்து வைத்திருந்தது.

எனவே, பேட்டை முதலியார் அவர்கள் வாழ்க்கையிலும் பாக்கியவான், மரணத்திலும் பாக்கியவான் ஆகிறார் அன்றோ?

• • •

இந்தியாவின் தேசியப் போராட்ட சரித்திரத்தில் பொது மக்களைத் திடுக்கிட்டு உடல் சிலிர்க்கும்படி செய்த சம்பவங்கள் சில நடந்திருக்கின்றன.

மன்னாதி மன்னர்கள் பெருமைப்படும் படியான வாழ்க்கை நடத்திய தேசபந்து தாஸும் அவருடைய தர்மபத்தினியும் சிறைப்பட்ட செய்தி 1921-ம் ஆண்டின் இறுதியில் வந்தபோது தேசத்தையே ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. பண்டித மோதிலால் நேருவும் அவருடைய வாழ்க்கைத் துணைவி ஸ்ரீமதி ஸ்வரூபராணி நேருவும் சிறைப்பட்ட போது அவ்விதமே தேசத்தை உலுக்கிவிட்டது.

இதே முறையில் தமிழ்நாட்டுப் பொது மக்களைக் கதிகலங்கச் செய்த செய்தி ஒன்று 1932-ம் ஆண்டின் ஆரம்பத்தில் வெளியாயிற்று. கனவானும் குணவானுமாகிய தேசபக்தர் ஸ்ரீ சி.என். முத்துரங்க முதலியார் சென்னை நகரத்துச் சைனா பஜார் வீதியில் சாத்விகச் சட்ட மறுப்புச் செய்யப் புறப்பட்டபோது அவரைப் போலீஸார் குண்டாந்தடியினால் மண்டை உடையும்படி அடித்தார்கள் என்றும், அதன் பயனாகப் பேட்டை முதலியார் மூர்ச்சித்து விழுந்தார் என்றும் அறிந்து ஆத்திரமும் ஆங்காரமும் அடையாத தமிழ் மகன் யாரும் இல்லை.

அதற்குப் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு ஸ்ரீ முத்துரங்க முதலியாரின் உடல் தளர்ந்து போயிருந்தும் 1942-ம் ஆண்டு இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறை புகுந்தார். மத்திய மாகாணத்தில் அமராவதி சிறையில் அவருடைய உடல் நிலை மிகவும்

பாதிக்கப்பட்டிருப்பதாக அறிந்து தமிழ் நாடு கவலைக் கடலில் ஆழ்ந்தது. ஏதோ சர்க்காருக்கு நல்ல சமயத்தில் புத்தி வந்து அவரை விடுதலை செய்தார்கள். எனினும் அமராவதி சிறையில் அவருடைய தேக சுகத்துக்கு ஏற்பட்ட தீங்கு அடியோடு நிவர்த்தியாகி விடவில்லை. அதற்குப் பிறகு ஏதோ ஐந்து வருஷ காலம் நம்மிடையே பேட்டை முதலியார் வாழ்வதற்கு காலம் கொடுத்து வைத்திருந்தது பற்றி மகிழ்ச்சி அடையவேண்டும்.

* * *

**ஸ்ரீ** முத்துரங்க முதலியாரின் தேச பக்தியும், காங்கிரஸ் பக்தியும் இணையற்றவை; மாசுமறு அற்றவை; எந்தவித பிரதிபலனையும் எதிர்பாராதவை.

1925-ம் வருஷத்தில் காஞ்சியில் நடந்த மாகாண மகாநாட்டுக்கு அவர் வரவேற்புத் தலைவராயிருந்தார். 1927-ல் சென்னையில் நடந்த பிரபலமான காங்கிரஸுக்கும் வரவேற்புத் தலைவரா யிருந்தார். மூன்று தடவை தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் ஸ்தானத்தை வகித்தார். மாகாண சட்டசபைகள் இரண்டிலும் இந்தியா சட்டசபையிலும் அங்கத்தினராகப் பல வருஷகாலம் இருந்தார். அங்கத்தினராக இருக்கும் வரையில் தம்முடைய கடமையை ஆற்றத் தவறியதில்லை. கடமையை ஆற்ற முடியாது என்று கண்டால் விட்டு விலகவும் பின் வாங்கியதில்லை.

இருநூறு அங்கத்தினருக்குமேல் உள்ள சென்னைச் சட்ட சபையில் சாதாரணமாக காற்பது அங்கத்தினரைக் காண்பதே அரிதா யிருக்கிறது. பாக்கி ஸ்தானங்கள் காலியாகவே யிருக்கின்றன!

ஆனால் ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் எந்தச் சட்டசபையில் அங்கம் வகித்தாலும் அவருடைய பீடம் காலியாக இருப்பதைக் காண்பது அரிது. ஏற்றுக் கொண்ட கடமையைச் சரிவர நிறைவேற்றுவதில் அவ்வளவு ஆர்வமும் உறுதியும் கொண்டவர் பேட்டை முதலியார்.

**கா**ந்தி மகாத்மாவுக்குப் பிரியமான "வைஷ்ணவ ஜனதோ" என்னும் பாடலைப் பற்றி நேயர்கள் அறிவார்கள். அந்தப் பாடலில் உண்மையான வைஷ்ணவனுக்கு என்னென்ன அருங் குணங்கள் இருக்க வேண்டும் என்று சொல்லி யிருக்கிறதோ. ஏறக்குறைய அவை யெல்லாம் படைத்தவர் ஸ்ரீ முத்துரங்கமுதலியார். எனவே, பகர விஷ்ணுவின் இருதய கமலத்துக்கும் மகாத்மா காந்தியின் தூய உள்ளத்துக்கும் உகந்த வைஷ்ணவர்.

பரம பக்தர்களும் தியாகிகளும் சன்மார்க்க சீலர்களும் அடையும் மேலான சொர்க்க பூமியை ஸ்ரீ முதலியார் அடைந்திருப்பார் என்பதில் ஐயமில்லை.

* * *

**ப**ல துறைகளில் ஸ்ரீ முத்துரங்க முதலியார் பாக்கியவானாயிருந்தது போல் அருமையான உறவினரைப் பெறுவதிலும் பாக்கியசாலி என்று சொன்னோம்.

அவருடைய உறவினர்களில் பிரபலமானவர் நமது மராமத்து இலாகா மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்கள். பர்மாவுக்குச் செல்வதற்காகப் புறப்பட்டுக் கல்கத்தா வரை போனவர், பர்மா சர்க்காரின் வேண்டுகோளின்படி பிரயாணத்தை ஒத்திப்போட்டுத் திரும்பிவந்த காரணத்தினால் ஸ்ரீமுதலியாரின் அந்திய காலத்தில் அவர் அருகில் இருப்பது சாத்தியமாயிற்று.

ஸ்ரீ முதலியாரிடம் உயிரையே வைத்திருந்த அவருடைய வயதான தமையனார் ஸ்ரீ எவளப்ப முதலியார் இன்று அருமைத் தம்பியின் பிரிவாற்றாமையினால் உருகித் தவித்துக்கொண் டிருக்கிறார்.

ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் அவர்களுக்குப் புதல்வர் ஸ்தானம் வகிப்பவரும் அவருடைய தமையனாரின் ஏக புதல்வருமான ஸ்ரீ சி. என். வரதப்பன் பெருந் துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார்.



மேற்கூறிய மூவருக்கும் மற்றும் பேட்டை முதலியாரின் பல்வேறு உறவினருக்கும் நூற்றுக்கணக்கான நண்பர்களுக்கும் நம் மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பாக்கியவானாக வாழ்ந்து பாக்கியவானாக மரணமடைந்து பொன்னுலகம் புகுந்த தேசபக்தத் தலைவருடைய புனித நினைவைப் போற்றி நமது அன்பையும் மரியாதையையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

# அலை ஓசை

## கல்கி

பத்தொன்பதாம் அத்தியாயம்

## இது என்ன உலகம்?

மறுநாள் பிற்பகலில் சௌந்தர ராகவன் மாஜி திவான் ஆதிவராகாச்சாரியார் வீட்டுக்கு வந்தபோது அவனுடைய முகத்தில் சோகம் குடிகொண்டிருந்தது. பல நாள் கவலைப்பட்டு இராத் தூக்கமின்றிக் கண் விழித்ததினால் ஏற்படக்கூடிய சோர்வு அவனுடைய முகபாவத்திலும் குழி விழுந்த கண்களிலும் பிரதிபலித்தது.

"என்ன, ஸார்! உங்களைப் பார்த்தால் 'பெண்டாட்டியைப் பறிகொடுத்தவன்' மாதிரி இருக்கிறதே!" என்று கூறிப் பாமா ராகவனை வரவேற்றாள்.

சுருக்கென்று கூரிய ஊசியினால் உடம்பிலே எங்கேனும் குத்தினால் முகம் எப்படிச் சுருங்குமோ, அப்படி ராகவனுடைய முகம் சுருங்கிப் பொறுக்க முடியாத வேதனையைக் காட்டியது.

"நீங்கள்கூட இப்படி அநுதாபம் இல்லாமல் பேசுவீர்கள் என்று நான் நினைக்கவேயில்லை. நான் போய் வருகிறேன்!" என்று அழுமாட்டாக் குறையாகச் சொல்லிவிட்டு ராகவன் திரும்பிப் போக யத்தனித்தான்.

அப்போது தாமா எழுந்து வந்து ராகவனுக்கு முன்னால் நின்று மறித்துக் கொண்டு, "அவள் கிடக்கிறாள், ஸார்! பாமாவுக்கு நாக்கிலே விஷம்! எல்லாரையும் விரட்டியடிப்பதுதான் அவளுடைய வேலை. அதனால்தான்......" என்று ஆரம்பித்தவள் தயங்கி வாக்கியத்தை நடுவில் நிறுத்தி விட்டு, "நீங்கள் வந்து உட்காருங்கள்! உங்களிடம் எங்களைப் போல் அநுதாபம் உள்ள சிநேகிதர்கள் இந்த டில்லியில் யாரும் இல்லை என்பது உங்களுக்குத் தெரிந்த விஷயந்தானே!" என்று சொன்னாள்.

ராகவன் திரும்பிப் போகும் உத்தேசத்தைக் கைவிட்டு விட்டுச் சோபாவில் உட்கார்ந்தான். "டில்லியில் மட்டும் என்ன? வேறு எங்கேயும் எனக்குச் சிநேகிதர்கள் கிடையாது. உத்தியோக சிநேகிதம் ரயில் சிநேகத்தை விட மோசமானது. நல்ல நிலைமையில் இருக்கும் வரையில் எல்லாரும் பிராண சிநேகிதர்கள் போல நடிப்பார்கள். தங்கள் காரியம் ஆவதற்காக நம்மைச் சுற்றிக் கொண்டே இருப்பார்கள். ஏதாவது கொஞ்சம் கஷ்டம் வந்துவிட்டால் எல்லாரும் கையை விரித்து விடுவார்கள். மூழ்குகிற கப்பலிலிருந்து எலிகள் ஓடுவது போல ஓடிப் போய் விடுவார்கள். நீங்களும் உங்கள் தகப்பனாரும் அதற்கு விதிவிலக்கு என்றும் நீங்கள் என்னுடைய உண்மையான சிநேகிதர்கள் என்றுந்தான் நம்பியிருக்கிறேன். நல்லதோ, கெட்டதோ, உங்கள் தகப்பனாரிடம் சொல்லி யோசனை கேட்டால்தான் மனம் நிம்மதி அடைகிறது. இப்போது அப்பா எங்கே?" என்று கேட்டான்.

"அப்பாவின் சிநேகிதர் பாங்கர் கஜான்ஜியாவை உங்களுக்குத் தெரியுமல்லவா? அவரும் இன்னும் சிலரும் சேர்ந்து இன்றைக்கு ஒரு புதிய இன்ஷியூரன்ஸ் கம்பெனி ஆரம்பிக்கிறார்கள். அதற்காக அப்பா போயிருக்கிறார். புதிய கம்பெனியில் அப்பாவும் ஒரு டைரக்டர்" என்றாள் தாமா.

" சில பேர்களுக்குத் திடீரென்று பாக்யம் பிறந்து விடுகிறது. இந்த ஜான்ஜியா ஐந்து வருஷத்துக்கு முன் )ல் சாதாரண மனிதரா யிருந்தார். )ப்போது ஐந்தாறு கோடி ரூபாய் ம்பாதித்து விட்டதாகச் சொல்லு றார்கள். இத்தனைக்கும் ஆசாமிக்கு )ங்கிலீஷில் கையெழுத்துப் போடக் .டத் தெரியாது. என்னைப் போல் த்தனையோ பேர் 'எகனுமிக்ஸ்' படித் 'ப் பட்டம் பெற்று விட்டு வாழ்நாள் ல்லாம் மாதச் சம்பளம் வாங்கிக் காண்டு காலங்கழிக்கிறார்கள். இந்த )லட்சணமான உத்தியோகத்துக்கும் மலே உள்ள மூடர்கள் எப்போது ட்டுக் கிழிப்பார்களோ என்று யந்து நடுங்க வேண்டியிருக்கிறது. )ன்றைக்கு அவ்விதம் எனக்கு ேர்ந்துவிட்டது!" என்று சொன்னான் சளந்தரராகவன்.

" என்ன என்ன ?" " கிட்டுக்கிழித்து 'ட்டார்களா ?" " உத்தியோகம் பாய் விட்டதா ?" " எதற்காக ?" அக்கிரமமா யிருக்கிறதே !" என்று ாமாவும் பாமாவும் மாற்றி மாற்றிப் பாழிந்தார்கள்.

" இன்னும் வேலை அடியோடு போய் 'டவில்லை. விசாரணை முடியும் வரை ல் 'ஸஸ்பெண்டு'. செய்திருக் றார்கள். ஆனால் அவர்கள் திரும்ப டுத்துக் கொண்டாலும் எனக்கு வலைக்குத் திரும்பிப் போகும் உத் தசம் இல்லை. வெகு நாளாக வேறு த்தியோகத்துக்குச் சிபார்சு செய் ம்படி அப்பாவைக் கேட்டுக் கொண் ருக்கிறேன். அதற்கு இதுதான் மயம். அப்பா இந்தச் சமயம் எனக்கு தவி செய்தேயாக வேண்டும். இல்லா ட்டால் வேறு வழியில்லை."

" அப்பாவுக்கு அதில் கஷ்டம் ஒன்று 'ராது. கஜ 'ன்ஜியாவின் பாங்கிலோ ன்ஷியூரன்ஸ் கம்பெனியிலோ பஷாக உங்களுக்கு வேலை போட்டுத் ரச் சொல்லுவார். உங்கள் விஷ த்தில் அப்பாவுக்கு ரொம்ப அபி ானமும் சிரத்தையும் உண்டு என்று ான் தெரியுமே ? ஆகையால் உத்தி பாகத்தைப் பற்றி நீங்கள் கொஞ்ச ம் கவலைப்பட வேண்டாம். ஆனால் _ந்ததை யெல்லாம் தயவு செய்து 'வரமாய்ச் சொல்லுங்கள். என்ன காரணத்துக்காக உங்களை 'ஸஸ்பெண்டு' செய்தார்களாம் ! விசாரணை எதற்காகவாம் ?" என்று தாமா கேட்டாள்.

அப்போது பாமா, " இதையெல்லாம் கேட்டு அவரை ஏன் தொந்தரவு செய்கிறாய் ? பாவம் ! அவர் சம்சாரத்தைப் பறி கொடுத்து விட்டு அதைப் பற்றிப் பேசிப் புலம்புவதற்காக வந்திருக்கிறார் !" என்றாள்.

" சீ ! நீ சும்மா இரு !—அவள் கிடக்கிறாள், நீங்கள் சொல்லுங்கள், ஸார் !" என்றாள் தாமா.

" பாமாவுக்கு என்பேரில் ஏதோ விசேஷ கோபம் என்று தோன்றுகிறது. இருக்கட்டும், பார்த்துக் கொள்ளலாம். இன்றைக்கு நான் ஆபீஸுக்குப் போனதும் இலாகாத் தலைவர் கூப்பிட்டு அனுப்பினார். 'சரி, ஏதோ வரப்போகிறது' என்று எண்ணிக்கொண்டு போனேன். அதற்குத் தகுந்தாற்போல் அவரும் 'ராகவன் ! உங்களை ஸ்ஸ்பெண்ட் செய்து வைக்க வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது. அதற்காக ரொம்பவும் வருத்தப்படுகிறேன். காரணம் உங்களுக்கே தெரிந்திருக்கக் கூடியதுதான் !' என்றார். 'எனக்குக் காரணம் ஒன்றும் தெரியவில்லை. தயவுசெய்து தாங்களே சொல்லிவிட்டால் நல்லது' என்றேன். 'அப்படியானால் சொல்கிறேன். புரட்சிக்காரர்களுக்கு அடிக்கடி உம்முடைய வீட்டில் அடைக்கலம் கொடுத்ததாக உம்பேரில் புகார் !' என்றார். 'அது எப்படி என் பேரில் புகார் ஏற்பட முடியும் ? புரட்சிக்காரனைப் பற்றி நான்தானே போலீஸுக்குத் தகவல் கொடுத்தேன் ?' என்று கேட்டேன். 'மிஸ்டர் ராகவன் ! நீர் மிக்க அறிவாளி !' என்றார் இலாகாத் தலைவர். 'உங்கள் நற்சாட்சிப் பத்திரத்துக்காக மிக்க வந்தனம் !' என்றேன். 'எனக்கு வந்தனம் தேவையில்லை. நீர் மிக்க அறிவாளியாகையால் விசாரணையின் போது இதை ஒரு காரணமாகச் சொல்ல வேண்டாம். அந்தப் புரட்சிக்காரப் பையனைப் பற்றிப் போலீஸார் தகவல் அறிந்து கைது செய்வதற்குத் தயாராகவே யிருந்தார்கள். அந்தச் சமயத்தில் நீர் தகவல் கொடுத்ததினால் என்ன பிரயோஜனம் ? தப்பித்துக்

கொள்வதற்காகக் கடைசி நேரத்தில் தகவல் கொடுத்ததாகவே ஏற்படும்!' என்றார். இதைக் கேட்டு நான் திகைத்துப் போனேன். முதலில் இன்னது சொல்வதென்று தெரியவில்லை. கார்டினல் உல்ஸி மரண தண்டனைக்கு ஆளானபோது சொன்னது நினைவு வந்தது. 'என்னுடைய அரசருக்கு நான் செய்த சேவையை என் ஆண்டவருக்குச் செய்திருந்தால் இந்த கதியை அடைந்திருக்க மாட்டேன்!' என்று உல்ஸி சொன்ன வாக்கியத்தை நானும் சொன்னேன். 'உம்முடைய அரசருக்கு நீர் உண்மையாகச் சேவை செய்ய வில்லை என்பதுதான் உம்பேரில் புகார். தெரிகிறதா?' சர்க்கார் உத்தியோகஸ்தர்கள், அதிலும் புதுடில்லி செக்ரடேரியட்டில் வேலை பார்ப்பவர்கள், ஸீஸருடைய மனைவியைப் போல் சந்தேகத்துக்கு இடங்கொடாதவர்களாயிருக்கவேண்டும். இது யுத்தகாலம் என்பது உமக்கு நினைவில் இருக்கிறதல்லவா? யுத்தத்திலும் மிக நெருக்கடியான கட்டத்தில் இருக்கிறோம். இதை உத்தேசித்துத்தான் இத்தனை காலமும் இல்லாத வழக்கமாக ஒரு இராணுவ தளபதியை இந்தியாவின் வைஸராய் ஆக்கியிருக்கிறார்கள். தளபதி வேவல் இந்தியாவின் வைஸராயாக வந்ததைக் கொண்டு யுத்த நிலைமையின் நெருக்கடியை நீர் ஊகிக்கலாமே?' என்றார். அதற்கு நான், 'ஆம், பேஷாக ஊகிக்கலாம்! இந்த வேவல் எங்கேயாவது எந்த யுத்த களத்திலாவது இருந்தால் கட்டாயம் கோட்டை விட்டு விடுவார் என்றுதானே அவரைப் பிடித்து வைஸராயாகப் போட்டிருக்கிறார்கள்?' என்றேன். ஆபீஸர் சிரித்து விட்டு, 'இந்த அபிப்பிராயத்தை நாளைக்கு அந்தரங்க விசாரணை நடக்கும் போது சொல்லலாம். இப்போது போய் வாரும்!' என்றார். 'என் பேரில் என்ன குற்றம்? என்ன சந்தேகம்? — அதைச் சொல்லவில்லையே?' என்று கேட்டேன். 'விசாரணையில் எல்லாம் விவரமாகச் சொல்வார்கள். நான் ஒரு குறிப்பு வேணுமானால் கொடுக்கிறேன். கைது செய்யப்பட்டவனிடம் உம்முடைய கைத்துப்பாக்கி இருந்தது சந்தேகத்துக்கு ஒரு காரணம்' என்றார். 'கைத் துப்பாக்கியை அவன் திருடியிருக்கலாம் அல்லவா?' என்று கேட்டேன். 'திருடியிருக்கலாம். ஆனால் அதற்கு ருசு வேண்டும். சந்தேகத்துக்கு இன்னொரு காரணம், உம்முடைய மனைவி திடீரென்று நேற்று ராத்திரி காணாமற் போனது' என்று ஆபீஸர் சொன்னதும், எனக்குத் தூக்கிவாரிப் போட்டு விட்டது. 'என் மனைவி காணாமற் போனதற்கும் நாம் பேசும் விஷயத்துக்கும் என்ன சம்பந்தம்?' என்று கேட்டேன். அதற்கு ஆபீஸர் சொன்ன பதிலைக் கேட்டதும் என்னுடைய கவலைகள்—கஷ்டங்கள் எல்லாம்கூட மறந்து போய் விட்டேன். குபீரென்று சிரித்துவிட்டேன். அதை நினைத்தால் இப்போதுகூட எனக்குச் சிரிப்பு வருகிறது!" என்று சொல்லி விட்டு ராகவன் முகத்தில் அசடு வழிய பலவீனமான சிரிப்பு ஒன்று சிரித்தான்.

"அப்படிச் சிரிக்கும்படியாக உங்களுடைய இலாகாத் தலைவர் என்னதான் சொன்னார்? சர்க்கார் உத்தியோகஸ்தர்களிலே அவ்வளவு நகைச்சுவை உடையவர்கள்கூட இருக்கிறார்களா?" என்று பாமா கேட்டாள்.

"அவர் அப்படி நகைச்சுவை உடையவர் அல்ல; ஹாஸ்ய உணர்ச்சியுடனும் பேசவில்லை. ஆனால் அவர் சொன்னது அவ்வளவு விசித்திர விஷயமாயிருந்தபடியால்தான் சிரித்தேன். உங்களுக்குத்தான் சீதாவைப் பற்றி நன்றாகத் தெரியுமே? அவளுக்கு அரசியல் விஷயமாக ஏ. பி. சி. டி. கூடத் தெரியாது. லின்லித்கோ போய் வேவல் வைஸராயாக வந்திருக்கிறார் என்பது கூடச் சீதாவுக்குத் தெரியுமோ, என்னமோ, சந்தேகந்தான். மகாத்மா காந்தி ஒருவர் பெயர்தான் அவளுக்குத் தெரியும். இந்த வருஷ ஆரம்பத்தில் காந்தியை விடுதலை செய்யவில்லை என்று மோடி, சர்க்கார், ஆனே மூன்று பேரும் ராஜிநாமா செய்தார்கள் அல்லவா? அப்போது சீதா என்னை 'நீங்களும் ராஜிநாமா செய்யுங்கள்' என்று நச்சரித்துவிட்டாள். நிர்வாக சபை அங்கத்தினருக்கும் என்னைப் போன்ற நிரந்தர செக்ரடேரியட் உத்தியோகஸ்தனுக்கும் உள்ள வித்தியாசம், நான் எத்தனையோ எடுத்துச் சொல்லியும், அவளுக்கு விளங்கவில்லை. 'அநுவும் சர்க்

ார் உத்தியோகம்; இதுவும் சர்க்கார் .த்தியோகந்தானே? அவர்கள் செய் தை நீங்களும் செய்தால் என்ன?' ன்று கேட்டான். 'அவர்கள் ராஜீ றமா செய்ததின் பலன் தெரியட்டும். ரப்புறம் நான் செய்கிறேன்' என்று சால்லிச் சமாதானப் படுத்தினேன். ஙவன் சொன்னபடி அப்போதே வலையை ராஜீனமா செய்திருக்கக் .டாதா என்று இப்போது தோன்று றது. செய்திருந்தால், இந்தத் தால்லைகளுக் கெல்லாம் உள்ளாகி ருக்க வேண்டாம் அல்லவா?" என் 'ன் ராகவன்.

"எதிலேயோ ஆரம்பித்து எதி லயோ முடித்தீர்களே? உங்கள் னைவி காணமற்போன விஷயமாகச் ர்க்காருக்கு என்ன சந்தேகமாம்?" ன்று பாமா கேட்டாள்.

"சந்தேகங்கூட இல்லை; நிச்சய ாகவே சொல்கிறார்கள். சீதாவும் ஒரு ரட்சிக்காரியாம். அவளும் சூரியா ம் சதிசெய்து சட்ட விரோதமான ல காரியம் செய்து வந்தார்களாம். ந்தியத் துருப்புகளின் போக்குவர வப் பற்றி இரகசிய ரேடியோ லம் சத்துரு தேசங்களுக்குத் தகவல் காடுத்து வந்தார்களாம். நானும் வர்களுக்கு உடந்தையாம். போலீ -க்குத் தகவல் சொல்லுவதுபோலச் சால்லிவிட்டு, அவர்களுக்கும் எச்ச க்கை செய்து தப்பித்துக் கொள்ளும் ு செய்து விட்டேனாம்! போலீ ன் சாமர்த்தியத்தினால் சூரியா பிடி ட்டு விட்டானாம். சீதா மட்டும் ங்கேயோ போய்ப் பதுங்கிக் கொண் நக்கிறாளாம். எப்படியிருக்கிறது தை?" என்றான் ராகவன்.

"கதைக்கு என்ன? நன்றாய்த்தா ருக்கிறது. ஒருநாள் திடீரென்று ாலீஸார் இந்த வீட்டுக்கு வந்து ாதனை போட்டாலும் போடு ர்கள். சீதா இங்கே ஒளிந்துகொண் நக்கிறாளோ என்று பார்ப்பதற்கு!"

"என்ன மூடத்தனம்! புதுடில்லிப் ாலீஸார் எதை வேணுமானாலும் ு விடுவார்கள் போலிருக்கிறது."

"சொல்லுகிறவர்கள் பக்குவமாய்ச் ான்னால், கேட்பவர்கள் நம்புவ ்கு என்ன? ஏற்கெனவே போலீ ர் வெறும் வாயை மெல்லுகிற வர்கள், அவர்களுக்கு ஒரு பிடி அவ லும் கிடைத்து விட்டால்!"

"பாமா! மறுபடி ஏதோ மர்ம மாகப் பேசுகிறீர்களே? பக்குவமாக யார் என்னத்தைச் சொல்லியிருக்க முடியும்?" என்று ராகவன் கேட்டான்.

"ராகவன்! இது விஷயமாக உங்க ளுக்கு ஒன்றும் சந்தேகமே உதிக்க வில்லையா? உங்கள் மனைவியையும் அந்த வாலிபனையும் பற்றிப் போலீ ஸுக்கு யாராவது உளவு சொல்லி யிருக்கவேணும் என்று தோன்ற வில்லையா? நீங்களும் அவர்களுக்கு உடந்தை என்றுகூடச் சொல்லியிருக்க வேணும். இல்லாத வரையில் உங்கள் பேரில் இவ்வளவு சந்தேகப்பட்டு நட வடிக்கை எடுத்திருக்க மாட்டார்கள்."

"கடவுளே! இப்படியும் இருக்க முடியுமா? யார் அந்த மாதிரி பொய் உளவு கொடுத்திருப்பார்கள்!"

"நேற்று மாலை நடந்த டின்னர் பார்ட்டியில் யாரோடு கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தீர்கள்? அவளா யிருக்கலாம் அல்லவா? உங்களுடைய குடும்பத்தின் அந்தரங்க விவகா ரங்கள் வேறு யாருக்குத் தெரியும்? வேறு யார் அப்படி நம்பிக்கை ஏற் படும்படி சொல்லியிருக்க முடியும்?"

"தாரிணியையா சொல்லுகிறீர்கள்? அழகாயிருக்கிறது! முந்தாநாள் அவ ளைப் புரட்சிக்காரி என்றீர்கள். இன் றைக்கு அவள் எங்களைப் பற்றி உளவு சொல்லியிருப்பாள் என்கி றீர்கள். இது என்ன வேடிக்கை?"

"வேடிக்கை ஒன்றுமில்லை. உங்கள் ஆபீஸர் சொன்னது போல் நீங்கள் அறிவாளிதான். ஆனால் சிற்சில விஷ யங்களில் நீங்கள் பச்சைக் குழந்தை போல் உலகமே தெரியாதவராயிருக் கிறீர்கள். நான் முந்தாநாள் சொன் னதற்கும் இன்று சொல்வதற்கும் வித்தியாசம் ஒன்றும் இல்லை. புரட் சிக்காரர்களுக்கு மத்தியில் தாரிணி புரட்சிக்காரிதான். அப்படி நடித் தால்தானே புரட்சி இயக்கத்தைப் பற்றிய உளவுகளைச் சேகரித்துச் சர்க் காருக்குச் சொல்ல முடியும்?"

"தாரிணியைச் சர்க்காருக்காக ஒற்று வேலை செய்கிறவள் என்றும், பொய்க் குற்றம் சாட்டுகிறவள் என்

றுமா சொல்லுகிறீர்கள்? ஐயோ! இது என்ன உலகம்?"

இப்படி ராகவனுடைய வாய் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவனுடைய மனம், தாரிணியைப் பற்றிய உண்மை அப்படி இருந்தாலும் இருக்கலாம் என்று எண்ணியது. இல்லாவிட்டால் அவ்வளவு பெரிய சர்க்கார் பதவியில் உள்ளவர்களிடம் அவளுக்கு எப்படி அத்தனை செல்வாக்கு இருக்க முடியும்? அவர்களுடன் அவ்வளவு சர்வ சுலபமாக எப்படிக் கலந்து பழக முடியும்? — என்னும் ஐயங்கள் உதித்தன.

"இது என்ன உலகம்?" என்ற ராகவனுடைய கேள்விக்குப் பதிலாகப் பாமா, "இது மிக மோசமான உலகம். பொய்யும் சூதும் மோசமும் தந்திரமும் நிறைந்த உலகம். இந்த உலகத்தில் உங்களைப் போன்ற சாதுக்கள் சிலரும் இருக்கிறார்கள். போகட்டும்; தங்கள் மனைவியின் விஷயம் என்னதான் ஆயிற்று? அதைப்பற்றி ஏதாவது தகவல் தெரிந்ததா?" என்றாள்.

"ஒன்றும் தெரியவில்லை. இதில் ஒரு துயரகரமான தமாஷ் சேர்ந்திருக்கிறது. நேற்று ராத்திரி நான் உங்களிடம் கூடச் சொன்னேனே? இனி மேல் என் வாழ்க்கையையே புதிய முறையில் தொடங்குவது என்றும் சீதாவுடன் மனம் ஒத்து இல்லறம் நடத்துவது என்றும் தீர்மானித்திருந்தேன். அவ்விதம் தீர்மானித்துக் கொண்டு வீட்டுக்குப் போய்ப் பார்த்தால், அவளைக் காணவே காணோம்! இதற்கு என்ன சொல்வது?" என்றான் சௌந்தரராகவன்.

"அற்ப மானிடர்களாகிய நம்முடைய உத்தேசத்துக்கெல்லாம் மேலாக விதி என்று ஒன்று இருக்கிறதல்லவா? அந்த விதி ஜயித்து விட்டது!" என்றாள் தாமா.

"நான் அப்படி விதியின்மேல் பழியைப் போடமாட்டேன். சாதுவாகிய சௌந்தரராகவனின் நல்ல உத்தேசத்தை ஒரு பெண்ணின் துர்மதி ஜயித்து விட்டது என்று சொல்வேன்" என்றாள் பாமா.

"நீ கொஞ்சம் வாயை மூடிக் கொண்டிரு! தெரிகிறதா?" என்று தாமா அதட்டிவிட்டு, "ஏன் ஸார்! சீதாவைப் பற்றி ஒன்றுமே தகவல் இல்லையென்றா சொல்கிறீர்கள்? கைது செய்யப்பட்ட சூரியாவிடமிருந்து விவரம் ஒன்றும் கிடைக்கவில்லையா? போலீஸ் இன்ஸ்பெக்டர் உங்களுக்குத் தெரிந்த சிநேகிதர் ஆயிற்றே?" என்று கேட்டாள்.

"தெரிந்த சிநேகிதர்தான்! முன்னொரு சமயம் எனக்குப் பெரிய உதவி செய்திருக்கிறார். இப்பொழுதும் அவரையே நம்பிக் கொண்டிருக்கிறேன். இந்த ஊரில் சூரியாவின் விசாரணை பகிரங்கமாக நடந்தால் என் மானம் போய்விடும், நாகபுரிக்கு அனுப்பி விடுங்கள் என்று கேட்டதற்கு ஒப்புக் கொண்டிருக்கிறார். என்பேரில் அந்தரங்க விசாரணை நடந்தால் என் பக்கம் பேசுவதாகவும் சொல்லியிருக்கிறார். ஆனால் சீதாவைப் பற்றி ஒன்றும் அவரால் இதுவரை கண்டுபிடிக்க முடியவில்லை. சூரியாவின் மண்டையில் பட்ட அடியினால் அவன் இன்னும் நல்ல அறிவு வராமல் கிடக்கிறான். மயக்கத்தில் பேத்துகிறபோது 'சீதா! சீதா!' 'ஆபத்து வந்து விட்டது!' 'பிடித்துவிட்டார்கள்!' என்று உளறுகிறான். அவன் ஏறியிருந்த டாக்ஸி டிரைவரிடம் என்னை அழைத்துப் போய் என் முன்னிலையில் விசாரித்தார். அவன் கூறிய விவரம் கொஞ்சம் விசித்திரமாயிருக்கிறது. ஷாஜஹான்பாத் வெள்ளி வீதியில் ஒரு வாலிபனும் ஒரு பெண்ணும் வண்டியில் ஏறிக் கொண்டார்களாம். ஜந்தர் மந்தர் சாலைக்கு வந்ததும் அந்தப் பெண் வண்டியிலிருந்து இறங்கி நடந்தாளாம். கொஞ்ச தூரம் போவதற்குள் இன்னொரு கார் வந்து அவள் பக்கத்தில் நின்றதாம். அந்தப் பெண்ணைப் பலவந்தமாக ஏற்றிக் கொண்டு கார் விரைவாகச் சென்றதாம். சூரியா சொன்னதின் பேரில் இந்த டாக்ஸி டிரைவரும் பின் தொடர்ந்து வண்டியை விட்டானாம். ஆனால் யமுனைப் பாலத்தில் அந்த வண்டி போன பிறகு இந்த டாக்ஸியை நிறுத்தி விட்டார்களாம். உடனே போலீஸ் வண்டி வந்து பிடித்துக் கொண்டது என்று சொல்கிறான். அவன் சொல்லும் சில அடையாளங்களிலிருந்து பலவந்தமாகப் பிடித்துக் கொண்டு போகப்பட்டவள் சீதாவாயிருக்கலாம் என்று எண்ண

இடம் இருக்கிறது. ஆனால் இந்தப் புது டில்லியில் 1943-ம் வருஷத்தில் இப்படியெல்லாம் நடக்குமா என்று எண்ணும் போது நம்பிக்கைப்பட வில்லை. மேலும் சீதாவை அப்படி யார் எதற்காகப் பிடித்துக்கொண்டு போகவேண்டும்? இதையெல்லாம் நினைக்க நினைக்கத் தலை சுற்றுகிறது!" என்றான் ராகவன்.

"ஆமாம்; முன்னால் போன வண்டியைப் பற்றிக் கண்டு பிடிக்கப் போலீஸார் முயற்சி எதுவும் செய்ய வில்லையா?" என்று பாமா கேட்டாள்.

"செய்தார்கள். நாலாபுறமும் தந்தி கொடுத்து டெலிபோன் செய்து குறிப்பிட்ட வண்டி வந்தால் நிறுத்தும்படி சொல்லியிருந்தார்கள். டாக்ஸி டிரைவர் முன்னால் சென்ற காரின் நம்பர் கொடுத்திருந்தான். அந்தக் கார் இங்கிருந்து இருநூறுவது மைலில் தடுத்து நிறுத்தப் பட்டது. ஆனால் அதில் பெண் ஒருவரும் இல்லை என்று தகவல் வந்திருக்கிறது. போலீஸ் இன்ஸ்பெக்டர் இன்று காலையில் என்னை டெலிபோனில் கூப்பிட்டுச் சொன்னார்!"

"ஆகக்கூடி, உங்கள் மனைவி சீதா போனவள் போனவள்தான்! மிஸ்டர் ராகவன்! உங்களுக்கு என் மனமார்ந்த அநுதாபம்!" என்றாள் பாமா.

"எனக்கு இவரிடம் கொஞ்சம் கூட அநுதாபம் இல்லை. ஊரெல்லாம் பேசிக் கொண்டிருந்த விஷயத்தை இவர் அறிந்து கொள்ளாமல் கண்ணைத் திறந்தபடி குருடரா யிருந்தார் அல்லவா? இவருக்கு இது நன்றாய் வேணும்!" என்றாள் தாமா.

"எது விஷயத்தில் நான் குருடனாய்ப் போனேன்? ஊரெல்லாம் என்ன பேசிக் கொண்டார்கள்?" என்று கேட்டான் ராகவன்.

"அதை வேறு விண்டு சொல்ல வேண்டுமா? நீங்கள் சீதாவை இத்தனை நாள் வீட்டில் வைத்துக் கொண்டிருந்ததே பிசகு என்று சொன்னார்கள். இப்போது அவளே ஒரு வழியாகத் தொலைந்து போய் விட்டாள்! அதற்காக வருத்தப்படுவானேன்? உண்மையில் சந்தோஷப்பட வேண்டும்!"

தாமா எதைக் குறிப்பிடுகிறாள் என்பதை ராகவன் ஒருவாறு தெரிந்து கொண்டு, சற்று நேரம் தலை குனிந்து மௌனமாக இருந்தான்.

"எப்படியோ என் வாழ்க்கை பாழாகி விட்டது. இத்தனை நாள் ஆபீஸ் வேலை இருந்தது; அதுவும் போய் விட்டது. இனிமேல் வாழ்க்கையில் என்ன இருக்கிறது?"

"ஏன் இல்லை! மதராஸில் அழகான சமர்த்துக் குழந்தை இருக்கிறது. குழந்தையை அழைத்து வைத்துக் கொண்டு நீங்கள் நிம்மதியா யிருப்பதை யார் தடுப்பார்கள்!"

ராகவனுடைய கண்ணில் நீர் ததும்பியது. "குழந்தையை அழைத்து வந்தால், முதலில் 'அம்மா எங்கே?' என்று கேட்பாளே? அதற்கு என்ன சொல்வது? மேலும் குழந்தையை அழைத்து வந்தால் யார் பார்த்துக் கொள்வார்கள்!" என்றான்.

"அதில் என்ன கஷ்டம்? குழந்தையை அழைத்து வருவதற்குள்ளே வீட்டில் இன்னொரு தாயாரைத் தயார் செய்து விடவேண்டும்! வீட்டுக்கு மனுஷியாச்சு! குழந்தைக்குத் தாயார் ஆச்சு! வேலையைப் பற்றிக் கவலையும் வேண்டியதில்லை. இந்த வேலை போய் விட்டால் அப்பா கட்டாயம் இதை விடப் பெரிய சம்பளம் உள்ள உத்தியோகம் வாங்கித் தருவார்!" என்று சொன்னாள் தாமா.

• • •

ராகவன் வீட்டுக்குத் திரும்பிச் சென்றபோது, 'இன்னொரு தாயார்' தயாரிப்பது பற்றித் தாமா சொன்னதின் கருத்து என்னவாயிருக்கும் என்று யோசித்துக்கொண்டே போனான். ஒருவாறு புரிந்தது. ஆனால் அவனுடைய மனம் அதைப் பற்றி நினைக்கவும் இடங் கொடுக்கவில்லை.

வீட்டை அடைந்ததும் வேலைக்காரர்கள் முகங்களில் சோகக் களையுடன் நிற்பதைப் பார்க்கச் சகியாமல் உள்ளே போனான். ஒவ்வொரு அறையாக வளைய வந்தான். அங்குமிங்கும் நடமாடினான். ஒவ்வொரு அறையும் ஒவ்வொரு மூலையும் ஒவ்வொரு சாமானும் ஒவ்வொரு படமும் சீதாவின் ஞாபகத்தைக் கொண்டு வந்தன. அந்த வீட்டுக்கு வந்த புதிதில் அன்பும் அருமையுமாக வாழ்ந்த நாட்களின்



விட்டது? தன்னுடைய நல்ல உத்தேசம் இவ்வாறு வீணாகி விட்டதே?

யோசித்துப் பார்க்கப் பார்க்க, சீதா தன்னிடம் வெறுப்புக் கொண்டுதான் வீட்டை விட்டு ஓடிப் போயிருக்கவேண்டும் என்று ராகவனுக்கு நிச்சயமாய்த் தோன்றியது. தன்னுடைய கொடுமை பொறுக்க முடியாமலேதான் போய்விட்டாள். எங்கே போயிருப்பாள்? ஒரு வேளை யமுனையில் விழுந்து உயிரை விட்டிருப்பாளோ? அல்லது குழந்தையைப் பார்ப்பதற்காகச் சென்னைக்கு ரயில் ஏறிப் போயிருப்பாளோ? அப்படியானால், சீக்கிரத்தில் தனக்குத் தகவல் தெரிந்து போய்விடும்.

சூரியா கைதியானதற்கும் சீதா காணமற் போனதற்கும் உண்மையில் ஏதேனும் சம்பந்தம் இருக்குமா? ஒரு நாளும் இருக்க முடியாது. காக்கை உட்காரப் பனம் பழம் விழுந்த கதைதான்! தாமாவும் பாமாவும் சூரியா—சீதா இவர்களின் பேரில் கெட்ட எண்ணம் உண்டாகும்படியாக ஜாடை ஜாடையாகப் பேசியதையெல்லாம்

சம்பவங்கள் ஞாபகம் வந்து அவன் உள்ளத்தை உருக்கின. பிற்காலத்தில் அவர்களுக்குள் நடந்த சண்டைகளும் நினைவு வந்தன. சண்டைகளை நினைத்த போதெல்லாம் குற்றம் தன் பேரில்தான் என்று அவனுக்குத் தோன்றியது. ஆனால் இனிப் பச்சாத்தாபப்பட்டு என்ன பிரயோஜனம்? போனவள் இனித் திரும்பிவரப் போகிறாளா? அல்லது அவள் இருந்த இடத்தில் இன்னொரு ஸ்திரீயைக் கொண்டு வந்து வைக்கத்தான் தனக்கு மனம் வருமா?

தன் வாழ்க்கையைப் புதுவிதமாகத் தொடங்கிச் சண்டைசச்சரவு இல்லாமல் பழைய நாட்களைப் போல் இல்வாழ்க்கை நடத்த வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு வீடு வந்த தினத்தில் அல்லவா இப்படி நடந்து

எண்ணிப் பார்த்து, அந்தப் பேச்சுகளில் ஏதேனும் உண்மை இருக்க முடியுமா என்று சிந்தித்துப் பார்த்தான். ஒருநாளும் இருக்க முடியாது என்ற முடிவுக்கு வந்தான்.

சில சமயம் தானும் சீதாவின் மனம் நோகும்படி சூரியாவைப் பற்றிப் பேசியதுண்டுதான். அதற்கெல்லாம் காரணம் சீதாவின் நடத்தையைப் பற்றித் தனக்கு ஏற்பட்ட சந்தேகம் அல்ல. அப்படிப்பட்ட கேவலமான சந்தேகம் லவலேசமும் தனக்கு எந்த நாளிலும் ஏற்பட்டதில்லை. சூரியாவின் பேரில் தனக்கு ஏற்பட்ட ஆத்திரத்துக்கெல்லாம் உண்மையான காரணம் என்ன? அவனைப் பற்றிப் போலீஸுக்குத் தகவல் கொடுக்கும்படியாக அவ்வளவு நீசத்தனமான காரியம் தான் செய்யப் புகுந்ததின்




உண்மைக் காரணம் என்ன? தன்னுடைய இருதய அந்தரங்கத்தை நன்கு சோதனை செய்து பார்த்து ராகவன் அந்த உண்மையைக் கண்டு பிடித்தான். தாரிணிக்கும் சூரியாவுக்கும் ஏற்பட்டிருந்த சிநேகந்தான் தன்னுடைய ஆத்திரத்துக்கெல்லாம் காரணம். அதனால் ஏற்பட்ட துரோகத்தையே அநியாயமாகச் சீதாவின் பேரில் காட்டி அவளுடைய வாழ்க்கையை நரகமாகச் செய்ததினாலேயே இந்த விபத்துக்கெல்லாம் தான் ஆளாக நேர்ந்தது.

முதல் நாள் மாலையில் நடந்த பார்ட்டியில் தாரிணி தன்னைக் கெஞ்சி வேண்டிக் கொண்டதெல்லாம் ஞாபகம் வந்தது. சீதாவை மதராஸில் கொண்டு போய் விட்டு விட்டு பம்பாய்க்கு வரும்படியும், வந்தால் தன் பிறப்பைக் குறித்த ஓர் அந்தரங்கத்தை வெளியிடுவதாகவும் தாரிணி சொன்னாள். அந்த இரகசியம் என்னவாயிருக்கும்? அதைத் தெரிந்து கொள்ள இனி வழி இல்லை. தாரிணியின் வாக்கை நிறைவேற்ற முடியாமற் போய்விட்டதே! சீதாதான் போய் விட்டாளே?

சாமாவும் பாமாவும் தாரிணியைச் சர்க்காரின் உளவுகாரி என்று சொன்னது சுத்த அபத்தம். அது ஒரு நாளும் உண்மையாயிராது. அந்தச் சகோதரிகள் வெகு பொல்லாதவர்கள். யார் பேரிலாவது குறை சொல்லுவதுதான் அவர்களுடைய தொழில். அவர்களுடைய சகவாசம் உதவவே உதவாது. இந்தச் சமயத்தில் தனக்கு ஆறுதல்

சொல்லக் கூடியவளும் உதவி செய்யக் கூடியவளும் தாரிணி ஒருத்திதான்

தாரிணியை எப்படியாவது சந்தித்து அவளிடம் ஆலோசனை கேட்கவேண்டும். சீதா போய்விட்டதைப்பற்றி அவளிடம் உடனே சொல்லிவிடவேண்டும்.

இன்னும் இரண்டு நாள் நேற்றைக் குப் பார்ட்டி கொடுத்த உத்தியோகஸ்தர் வீட்டிலே இருப்பேன் என்று சொன்னாள் அல்லவா? அங்கே அவளைக் கூப்பிட்டுப் பார்க்கலாம்.

டெலிபோனை எடுத்து ராகவன் விசாரித்தான். மேற்படி உத்தியோகஸ்தரின் வீட்டில் தாரிணி இல்லையென்று பதில் வந்தது.

அந்த நிமிஷத்தில் ராகவனுக்குத் தன்னுடைய வருங்கால வாழ்க்கையெல்லாம் சூனியமாகத் தோன்றியது.

---

# இனிய திருமணம்

பம்பாய் மதுங்காவில் தென்னிந்திய சமூகத்தின் பிரமுகர்களில் ஒருவரான ஸ்ரீ எச். சிவராமகிருஷ்ண அய்யர் அவர்களின் செல்வப் புதல்வி சௌ. லக்ஷ்மிக்கும் ஆலப்புழை ஸ்ரீ ஹரிஹரய்யர் அவர்களின் குமாரர் ஸ்ரீ கோபால கிருஷ்ணன் (பி. காம்.) அவர்களுக்கும் சென்ற ஜனவரி மீ 24உ ஆலப்புழையில் திருமணம் இனிய முறையில் நடந்தேறியது. ரஸிக மணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களும் மற்றும் பல பிரமுகர்களும் நண்பர்களும் விஜயம் செய்து திருமணத்தைச் சிறப்பித்தார்கள். திருமணத்தின்தன்று இரவு கலியாண வீட்டு வாசலில் கூடியிருந்த சுமார் பதினாயிரம் ஜனங்களின் முன்னிலையில் குமாரிகள் ஆனந்தி — ராதாவின் நாட்டிய அபிநயக் கச்சேரி நடந்தது. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் அபிநயத்துக்குப் பதம்பாடிச் சிறப்பித்தார்கள். நாட்டியக் கச்சேரி நடந்த மூன்று மணி நேரம் அந்தப் பதினாயிரம் ஜனங்களும் நிச்சப்தமாக இருந்து பரவசமாகப் பார்த்து மகிழ்ந்தார்கள்.



மேற்படி கலியாணத்துக்கு ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் விஜயம் செய்திருந்ததை யொட்டி ஆலப்புழை ரெட்டியார் சங்கத்தார் ரஸிகமணிக்குச் சிற்றுண்டி விருந்து அளித்துக் கௌரவித்தார்கள். ஆலப்புழையின் பிரபல வர்த்தகரான ஸ்ரீ பி. ராஜகோபால் ரெட்டியார் அவர்களின் அழகான மாளிகைத் தோட்டத்தில் விருந்து நடந்தது. ரெட்டியார் சங்கத்தின் தலைவரும் காரியதரிசியுமான ஸ்ரீ எஸ். விரய்யா ரெட்டியார் அவர்களும், ஸ்ரீ எஸ். குமாரசாமி ரெட்டியார் அவர்களும் முன்னின்று வைபவத்தை நடத்தி வைத்தார்கள். ஆலப்புழைப் பிரமுகர்கள் சுமார் இருநூறு பேர் விஜயம் செய்திருந்தார்கள். ரஸிகமணி அவர்கள் ஸ்ரீ ராஜகோபால ரெட்டியாருக்கும் மற்ற நண்பர்களுக்கும் வந்தனம் கூறி, அழகிய தமிழ்ப் பாடல் ஒன்றைச் சொல்லி அனைவரையும் மகிழ்வித்தார்கள்.



# சுதந்திர மாளிகை

ஜெயமணி



## 4. பார்லிமெண்டு, சட்டசபைகள்

இந்தியா பார்லிமெண்ட்: புதிதாகத் தேர்ந்தெடுக்கப் படும் ஜனப்பிரதிநிதி சபையும் ராஜாங்க சபையும் இந்தியாவின் பார்லிமெண்டாக விளங்கும்.

ராஜாங்க சபையில் இருநூற்று ஐம்பது அங்கத்தினர் இருப்பார்கள்.

அவர்களில் பன்னிரண்டு அங்கத்தினர்கள் பிரஸிடெண்டால் நியமிக்கப்படுவார்கள். அதாவது இலக்கியம், கலை, விஞ்ஞானம், சமுதாயத் தொண்டு முதலியவற்றில் திறமையோ அல்லது அநுபவமோ உள்ள பன்னிரண்டு பேர்களைப் பிரஸிடெண்டு நியமிப்பார். மற்றவர்கள் மாகாணங்களின் பிரதிநிதிகளாக இருப்பார்கள்.

மாகாணங்களிலோ அல்லது சமஸ்தானங்களிலோ இரண்டு சபைகள் இருக்குமாயின், அவற்றில் கீழ் சபையே ராஜாங்க சபைக்கு அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அங்கு ஒரே சபை இருக்குமாயின் அதிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களே ராஜாங்க சபைக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். சட்ட சபையே இராதிருக்குமாயின், இந்தியா பார்லிமெண்டு அவ் விஷயமாக விதிக்கும் சட்டத்துக்கு இணங்க குறிப்பிட்ட பிரதேசத்திலிருந்து ராஜாங்க சபைக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

### திருத்தம்

சென்ற இதழில் கீழ்வருமாறு திருத்தி வாசித்துக் கொள்ளவும்.

5-வது பாரா: பிரஸிடெண்டு தமது பதவியை ராஜிநாமா செய்ய விரும்பினால், அவர் தம்முடைய ராஜிநாமாக் கடிதத்தை உப தலைவரிடம் சமர்ப்பிக்க வேண்டும். உப தலைவர் அவ் விவரத்தை ஜனப்பிரதிநிதி சபைத் தலைவருக்கு அறிவிப்பார்.

8-வது பாரா: ஒருமுறை இந்தியக் குடியரசின் பிரஸிடெண்டாகத் தேர்ந்தெடுக்கப் படுவோர் மீண்டும் அந்தப் பதவிக்காகத் தேர்தலுக்கு நிற்கலாம்.

மாகாண சட்டசபைகளிலுள்ள சிறுபான்மையோர் கட்சிக்கும் ராஜாங்க சபையில் விகிதாசாரப்படி ஸ்தானங்கள் கிடைக்கும் விதத்தில் மேற்படி சபைகளில் ராஜாங்க சபைக்குத் தேர்தல் நடைபெறும்.

இந்தியா பார்லிமெண்டு அதாவது இந்தியா ஜனப்பிரதிநிதி சபையில் ஐந்நூறு அங்கத்தினர்களுக்கு மேல் இருக்கக் கூடாது. அவர்கள் சமஸ்தானங்கள் உள்பட மாகாணங்களிலுள்ள வாக்காளர்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப் படுவார்கள்.

தனித்தொகுதிகள், விசேஷ சலுகைகள் இவை ஒழிக்கப்பட்டுவிட்டன வெனினும், முஸ்லிம்களுக்குப் ஹரிஜனங்களுக்கும் இந்தியக் கிறிஸ்துவர்களுக்கும் ஜனப்பிரதிநிதி சபையில் ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்படும்

மேற்படி சபையில் ஆங்கிலோ - இந்தியர் சமூகத்துக்குப் போதிய பிரதிநிதித்துவம் இல்லையென்று குடியரசுத் தலைவர் கருதினால், அவர் அந்தச் சபைக்கு இரண்டு பேருக்கு மேற்படாமல் அந்தச் சமூகத்தைச் சேர்ந்தவர்களை அங்கத்தினராக நியமிக்கலாம்.

ஒவ்வொரு ஐந்து லட்சம் ஜனங்களுக்கும் ஒரு பிரதிநிதிக்கு மேல இருக்கக் கூடாது. ஒவ்வொரு ஏழரை லட்சம் ஜனங்களுக்கும் ஒரு பிரதிநிதிக்குக் குறைவாகவும் இருக்கக்கூடாது. இதை அனுசரித்துத் தொகுதிகளும் பிரதிநிதிகளின் தொகையும் நிர்ணயிக்கப்படும். ஒரு தொகுதியிலுள்ள ஜனத்தொகையும், அதைச் சேர்ந்த பிரதிநிதிகளின் தொகையும் அநேகமாக இந்தியா முழுதும் ஒரே விதமாகவே இருக்கும்

ஜனப் பிரதிநிதி சபை அங்கத்தினர் தேர்தலில் வயது வந்த சகலருக்கும், அதாவது இருபத்தொன்று வயதுக்குக் குறையாத சகலருக்கும் வோட்டுக் கொடுக்க உரிமையுண்டு. எனினும் இந்தியா அரசியல் திட்டத்தின் படியோ அல்லது இந்தியா பார்லி

மெண்டு சட்டத்தின்படியோ குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட காலம் வசிக்காதவர். சித்த சுவாதீனம் இல்லாதவர், குற்றம் செய்தவர் முதலியோருக்குத் தங்களை வோட்டர்களாகப் பதிவு செய்து கொள்ள உரிமையில்லை.

மாகாணங்களைத் தவிர இதர பகுதிகளுக்கு ஜனப்பிரதிநிதி சபையில் பிரதிநிதித்துவம் அளித்துச சட்டம் செய்ய மேற்படி சபைக்கு அதிகாரம் உண்டு.

ஒவ்வொரு தடவையும் சென்ஸஸ் அதாவது ஜனசங்கியைக் கணக்கு எடுத்துப் பூர்த்தியான பிறகு ராஜாங்க சபையின் பிரதிநிதித்துவத்தையும், ஜனப்பிரதிநிதிச் சபையின் வாக்காளர் தொகுதிகளையும் பரிசீலனை செய்து மாற்ற பிரஸிடெண்டு நியமிக்கும் கமிஷனுக்கு அதிகாரம் உண்டு. அவ்வாறு மாற்றவேண்டிய தேதியைப் பார்லிமெண்டு நிர்ணயிக்கும். அத்தகைய மாறுதல் அப்போதுள்ள ஜனப்பிரதிநிதி சபை கலையும் வரையில் அதன் பிரதிநிதித்துவத்தைப் பாதிக்காது.

பார்லிமெண்டுக்கு நடக்கும் தேர்தல்கள், குடியரசுத் தலைவர், உபதலைவர் முதலியோரின் தேர்தல்கள் முதலியவற்றைப் பரிசீலனை செய்யவும் மேலே குறிப்பிட்ட கமிஷனுக்கு அதிகாரம் உண்டு.

அப்போதைக்கப்போது புதிய மாகாணங்கள், சமஸ்தானங்கள் அல்லது பிரதேசங்களை ஸ்தாபிக்கவும் அவற்றை ஐக்கிய இந்தியாவுடன் சேர்த்துக்கொள்ளவும் பார்லிமெண்டுக்கு அதிகாரம் அளிக்கப் பட்டிருக்கிறது.

மற்றும் அவற்றின் விஸ்திரணத்தை அதிகரிக்கவோ, குறைக்கவோ, எல்லைகளை மாற்றவோ. பெயர்களை மாற்றவோ பார்லிமெண்டுக்கு அதிகாரம் உண்டு.

அத்தகைய தீர்மானத்தை இந்திய சர்க்காரைத் தவிர வேறு எவருக்கும் பார்லிமெண்டில் கொண்டுவர அதிகாரமில்லை.

எனினும் மாகாண எல்லைகளை மாற்றுவதாயின், குறிப்பிட்ட மாகாண சட்டசபையின் அபிப்பிராயத்தை அறிந்துகொண்ட பின்னர்தான், அத்தகைய தீர்மானத்தைப் பார்லிமெண்டில் கொண்டு வருவதற்குப் பிரஸிடெண்டு அனுமதியளிப்பார். சமஸ்தான எல்லைகளை மாற்றுவதாயின். குறிப்பிட்ட சமஸ்தான சட்டசபையின் அங்கீகாரத்தைப் பெற்ற பின்தான் பிரஸிடெண்டு அவ்வித தீர்மானத்துக்கு அனுமதி கொடுப்பார்.

மாகாண சட்டசபைகள்: சென்னை, பம்பாய், மேற்கு வங்காளம், ஐக்கிய மாகாணம், பீஹார், கிழக்கு பஞ்சாப் மாகாணங்களில் மேல் சபை (கவுன்சில்), கீழ் சபை (அசெம்பிளி) என்று இரண்டு சபைகள் இருக்கும்.

# தாயின் பாசம்



தாயார்:—அப்பா, குழந்தை! சாந்தாய் ஆபீஸுக்குப் போய் விட்டு தோய், தொடு, ஸ்ட்ரைக் வியாதி ஒன்றுமில்லாமல் வந்து சேரு!

மத்திய மாகாணம் - பீரார், அஸ்ஸாம், ஒரிஸ்ஸா மாகாணங்களில் ஒரு சட்டசபைதான் (அசெம்பிளி மாத்திரம்) இருக்கும்.

மேலே குறிப்பிட்ட மாகாணங்களின் பிரதிநிதிகளுடைய விருப்பத்துக்கு இணங்கவே, சில மாகாணங்களுக்கு இரண்டு சபைகளும், சில மாகாணங்களுக்கு ஒரு சபையும் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன.

மாகாண சட்டசபை அங்கத்தினர் தேர்தலில் இருபத்தொன்று வயதுக்குக் குறையாத சகலருக்கும் வோட்டுக் கொடுக்க உரிமையுண்டு.

எனினும் இந்தியா அரசியல் திட்டத்தின்படியோ, இந்தியா பார்லிமெண்டு சட்டப்படியோ குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட காலம் வசிக்காதவர், சித்த சுவாதீனம் இல்லாதவர், குற்றம் செய்தவர் முதலியோருக்கு வோட்டுக் கொடுக்க உரிமையில்லை.

அசெம்பிளி அங்கத்தினர்களின் மொத்தத் தொகை ஐந்நூறுக்கு மேல் இருக்கக் கூடாது.

ஒவ்வொரு எழுபத்து ஐயாயிரம் ஜனங்களுக்கும் ஒரு பிரதிநிதிக்குமேல் இருக்கக் கூடாது.

திருச்சி மேலப்புலிவார் ரோடு
எஸ்.பி.ஜி. மைதானத்தில் நடைபெறும்
காதி & சுதேசி பொருட்காட்சியில்

நெ. 149 - 151

## "ஸ்டேப்ரைட்"

ஸ்டாலுக்கு விஜயம் செய்தீர்களா?

அவசியம் தங்களை குடும்பத்துடன் பார்வையிட வரவேற்கும் ஸாம்ஸன் கம்பெனி ஸ்டால் அதுதான்

வீடுகளுக்கும், விடுதிகளுக்கும் ஹோட்டல்களுக்கும் ஹாஸ்டல்களுக்கும் மிகவும் உபயோகமாகக் கூடிய "ஸ்டேப்ரைட்" பாத்திரங்கள் ஏராளமாக வந்து குவிந்துள்ளன.

●

பம்பாய் தேவிதயாள் கம்பெனியாரால் தயார் செய்யப்பட்டவை

●

டம்ளர்கள், காண்டிகள், காப்பி பில்டர்கள், கோப்பைகள், ஸ்பூன்கள் ஸாஸ்பேன்கள், போஜனத் தட்டுகள் டிபன் கிண்ணங்கள், பக்கெட்டுகள் பேஸின்கள், சம்படங்கள், தட்டுகள் முதலிய உபயோகமான பாத்திரங்களை மேற்படி ஸ்டாலில் வந்து பார்த்து மகிழுங்கள். பிறகு வாங்குங்கள்.

வெள்ளியின் அந்தமும் இரும்பின் உறுதியும் ஒருங்கே கொண்ட ஸ்டேப்ரைட் பாத்திரங்களுக்கு ஈடு, உவமை வேறில்லை.

●

சமஸ்தானங்கள், இலங்கை, உள்பட தென்னிந்தியா பூராவுக்கும் பூரண விற்பனை ஏஜண்டுகள் :

### ஸாம்ஸன் & கோ, லிமிடெட்

8-22, பிராட்வே (த. பெ. 1219) மதறாஸ் - 1
போன் : 4521 தந்தி : BARAPASH

## சிக்கனத்திற்கோர் உதாரணம்

●

பொதுவாக நகரங்களிலும் கிராமங்களிலும்கூட பணக்காரர்கள் வீட்டிலும் சரி, நடுத்தரமானவர்கள் வீட்டிலும் சரி, ஒவ்வொரு வருஷத்திலும் ஏதாவது விசேஷங்கள் நடைபெறுகின்றன. பந்து மித்திரர்கள் எல்லோரும் வந்து கூடுகின்றனர்.

**கூட்டம் என்றாலே காற்றோட்டம் குறைந்து விடுமல்லவா?**

அதற்காக சிலர் வேலையாட்களைக் கொண்டு மின்சார வசதி இருந்தாலும் பனை ஓலை விசிறியால் விசிறச் செய்கிறார்கள். அதனால் அருகிலுள்ள ஒரு சிலருக்கு மட்டுந்தான், போதியும் போதாமலும் காற்று படுகிறது.

மின்சாரத்தைப் பயன்படுத்தி இரு டேபிள் விசிறியையோ, இரு ஸீலிங் விசிறியையோ, அல்லது ஒரே ஒரு பெடஸ்டல் விசிறியையோ உபயோகித்தால் அனைவருக்கும் நீண்ட நேரம் தடையின்றி குளுமையான காற்று 'ஜிலு ஜிலு' என்று வீசுமல்லவா?

**மலிந்த விலையில், மிகக் குறைவான மின்சார செலவில், குளுமையான காற்றை அள்ளி வீசுவது போலிக்ஸ் மின்சார விசிறிகள்தான்.**

உங்களுக்கு அருகாமையிலுள்ள போலிக்ஸ் டீலர்களிடம் விவரங்களைத் தெரிந்து கேளுங்கள்.

●

தென் சென்னைப் பிராந்தியங்களுக்கு
(சென்னை நகரம், சமஸ்தானங்கள் உள்பட)
பூரண விற்பனை உரிமையாளர்கள்

### ஆர். எம். எஸ்.
### & கம்பெனி, லிமிடெட்

16, பிராட்வே :: மதராஸ்
போன் : 4060 தந்தி : "AREMESCO"

கோவை ஜில்லாவுக்கு ஸப்-டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :
மெஸர்ஸ். ஷண்முகம் & கோ.
5/106, ஜெயில் ரோடு, கோயமுத்தூர்




## என்ன வாழ்க்கை இது?

பிரசித்தி பெற்ற மாலியர் என்ற பிரெஞ்சு நாடகாசிரியர் சமூகத்தில் காணப் படும் பல குற்றம் குறைகளை வைத்து, பல அற்புதமான நாடகங்கள் எழுதி பிரெஞ்சு இலக்கியத்துக்கும் பிரெஞ்சு சமுதாயத் துக்கும் அருமையான தொண்டாற்றினர். அண்ணாமலை சர்வகலாசாலைப் பேராசிரியர் ஸ்ரீ மயிலேறு எழுதியிருக்கும் "என்ன வாழ்க்கை இது?" என்ற நாடகத் தொகுதி யைப் பார்க்கும்போது, "இது மயிலேறு எழுதியதா? மாலியர் எழுதியதா? ஒரு வேளை மாலியர் என்பதற்குப் பதிலாக அச்சுப் பிழையாக மயிலேறு என்று போட்டு விட்டார்களோ?" என்பதாகத்தான் தோன்றும். பேராசிரியர் மயிலேறு அவ் வளவு அருமையாக மாலியரின் நாடகப் பண்பைக் கையாண்டிருக்கிறார்.

இந்தத் தொகுதியில் மொத்தம் ஐந்து நாடகங்கள் இருக்கின்றன. மூடப் பழக்க வழக்கங்களில் ஆழ்ந்து போயிருக்கும் நம் பெண்மணிகள் ஒரு போலி பைராகியால் ஏமாற்றப்படுவதை முதல் நாடகமாகிய "ஸ்படிகக்கல்" விளக்குகிறது. உலகத்தில் ஒவ்வொருவனும் மற்றவனைப் பார்த்து, "ஆஹா, அவனல்லவா சுகமாயிருக்கிறான்?" என்று பொறாமைப்படுவது எவ்வளவு தப்பு என்பதை "பொறாமைச் சக்கரம்" என்ற நாடகம் அருமையாகச் சித்திரிக்கிறது. பெண்கள் ஓரளவு புருஷனுக்குக் கட்டுப் பட்டு நடந்தால்தான் குடும்ப வாழ்க்கை நடக்கும் என்பதை "என்ன வாழ்க்கை இது?" என்ற நாடகம் விளக்குகிறது.

தமிழில் நல்ல நாடகங்கள் மிகவும் குறைவு; அந்தக் குறையை ஆசிரியர் மயி லேறு இந்த நாடகத் தொகுதியின் மூலம் ஓரளவு போக்கி யிருக்கிறார். அவருடைய தொண்டைப் பாராட்டுகிறோம். பிரசுரம்: சேவுகன் பிரிண்டர்ஸ் அண்ட் டிரேடர்ஸ் லிமிடெட், சிதம்பரம். விலை ரூ 1-3-0

## நடராஜாஞ்சலி

பகவானை அஞ்சலி செய்து வழிபடும் பக்தமணிகள் தம் வழிபாட்டைப் பலவித மாகச் செய்கிறார்கள். "ஏழிசையாய் இசைப்பயனாய்" விளங்கும் இறைவனைப் பண்ணோடு பாவி வாழ்த்தி யிருக்கிறார்கள் சிலர். தேனினுமினிய செந்தமிழ்ப் பாடல் களை அகம் கனிந்து பாடி அப்பாடல்களை யாழொடு இசைத்துச் சிலர் ஆனந்த பரவச மடைந்திருக்கின்றனர்.

யோகி சுத்தானந்த பாரதியார் தில்லையம் பலத்தில் திருநடம் புரியும் நடராஜப் பெரு மான் புகழை நடனப் பண்ணில் இசைத்து அஞ்சலி செய்திருக்கிறார்.

ஆடலுக்கும் பாடலுக்கும் அபிநயம் பிடிப் பதற்கும் நடிப்பதற்கும் ஏற்ப, பாவம், ரஸம் தாளம் மூன்றையும் அமைத்து இயற்றப்பட் டிருக்கின்றன இந்தச் சாஹித்யங்கள்.

## வீர விளக்கு வ. வெ. சு. ஐயர்

சைம்மாறு கருதாது தேச நலன் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு தேச சேவை செய்த தேசபக்தர்களுள் மகரிஷி வ. வெ. சு. ஐயரைத் தமிழர்கள் என்றும் மறக்க முடியாது.

ஐயரது சரித்திரத்தை ஸ்ரீ சுவாமி சுத்தானந்த பாரதியார் இந்த நூலில் விரிவாக எழுதி யிருக்கிறார். ஐயரின் அஞ்ஞாத வாச காலத்தில் நேர்ந்த சம்ப வங்களை இப்புத்தகத்தில் படிக்கும் போது, திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்த நாவலைப் படிப்பது போலிருக்கிறது. ஐயர் இறுதி நாளில் பாபநாசம் கல்யாண அருவி யில் தம் அருமை மகளைப் பறிகொடுத்துத் தாமும் அவ்வெள்ளத்தில் குதித்து மறைந்த செய்தியைப் படிக்கும்போது நம் மனமும் சோக வெள்ளத்தில் ஆழ்ந்து விடுகிறது. பிரசுரம்: வசந்தா பதிப்பகம், கண்டனூர், ராமநாதபுரம். விலை: ரூ. 4.

## திரை உலகம்

நல்ல படம் தயாரிக்க நினைக்கிறார் பட முதலாளி. முடிவதில்லை. ஏன்? அழகான கதை எழுத விரும்புகிறார் ஆசிரியர். முடிவ தில்லை. ஏன்? உயர்தரமாக டைரக்ட் செய்ய எண்ணுகிறார் டைரக்டர். முடிவ தில்லை. ஏன்? அற்புதமாக நடிக்க ஆவல் கொள்ளுகிறார் நடிகர். முடிவதில்லை. ஏன்?

இந்தமாதிரியான சிக்கலான கேள்வி களுக்குப் பதிலளிப்பதுடன் தமிழ்ப்பட உலகத்தைச் சீர்திருத்தவும் வேண்டும் என் னும் நோக்கத்துடன் இந்த மாதப் பத்திரி கையை ஆரம்பித்திருக்கிறார் ஸ்ரீ டி. கே. கோவிந்தன். விலாசம்:—52, ஜாபர்ஷா தெரு, திருச்சிராப்பள்ளி. தனிப்பிரதி: அ.4.

# ரேடியோப் பாடகர்!



சிறு வயதிலே நான் குருகுல வாசம் செய்து,



என் குருநாதருக்கு வேஷ்டி துவைத்துப் போட்டு,



வெற்றிலைப் பெட்டி தூக்கி,



காப்பி ஆற்றிக் கொடுத்து,



மோதிரக் கையினால் குட்டுப்பட்டு,




இப்படியெல்லாம் வித்தை கற்றுக் கொண்டதனால் அல்லவோ, இன்று பிரசித்த ரேடியோப் பாடகனாக விளங்குகிறேன்!

சாமா—




டாமிக்கு அந்த வீட்டிலிருந்த செல்வாக்கு கொஞ்சநஞ்சமல்ல. வேளா வேளைக்குப் பாலும் பிஸ்கோத்தும் ரொட்டியும் தின்று வளர்ந்து வந்ததனால் பார்ப்பதற்குப் பளபள என்று இருந்தது. வீட்டுக் குழந்தைகளுக்கெல்லாம் டாமியின் முதுகைத் தடவிக் கொடுப்பதில் ரொம்ப திருப்தி. வெல்வெட் மாதிரி வழவழ வென்று இருந்த டாமியைக் கண்டால் அந்தத் தெருவில் வசித்த ஜனங்கள் எல்லோரும் ஒரு தடவையாவது தடவிக் கொடுக்காமல் போக மாட்டார்கள்.

இதனால் டாமிக்குக் கொஞ்சம் கர்வம் உண்டாகியிருந்தது. என்னைப் போல் இவ்வளவு அழகாகவும் பளபளப்பாகவும் யார் இருக்கிறார்கள்! என்று தனக்குள் சொல்லி வாலை ஆட்டிக் கொள்ளும்.

அன்றைக்குக் காலையில் எழுந்திருந்ததும் வெண்ணெய் பிஸ்கோத்தை வயிறு நிறையத் தின்று விட்டு, டாமி உற்சாகத்துடன் துள்ளித் துள்ளிக் குதித்துக் கொண்டு கூடத்துக்கு வந்தது; சந்தோஷ மிகுதியில் 'வள் வள்' என்று குரைத்து விட்டுக் கூடம் முழுவதும் சுற்றி வந்தது.

ஏன் அந்த மூலையின் அருகே போனதும் டாமி பிரமித்துப் போய் நின்று விட்டது? என்ன ஆச்சரியம்! அந்தத் தெருவிலேயே டாமியைத் தவிர அழகான நாய்க்குட்டியே கிடையாதே! அப்படித்தான் இது வரையில் டாமி நினைத்துக் கொண்டிருந்தது. ஆனால் இப்பொழுது அந்த மூலையில் உட்கார்ந்திருந்த கர்வம் பிடித்த புது நாயைப் பார்த்ததும் டாமி தன் எண்ணத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று.

அந்தப் புதிய நாய் உண்மையிலேயே அழகாய்த்தான் இருந்தது. பழுப்பு நிறமும் வெள்ளை நிறமும் கலந்து அதன் உடம்பு பளபளவென்று இருந்தது. அதன் மேனி அடர்த்தியாய்ச் சுருண்டிருந்தது. அந்தப் புதிய நாயைக் கண்ட டாமிக்குப் பொறாமை வந்து விட்டது. "நான் இந்த வீட்டிற்கு ராஜா! நீ யார்?" என்று கோபத்துடன் கேட்டது.

அடேயப்பா! அந்தப் புதிய நாய்க்குத் தான் எத்தனை கர்வம்! அது டாமியைத் திரும்பிக்கூடப் பாராமல் உட்கார்ந்திருந்தது.

டாமிக்குப் பொறாமையுடன் இப்பொழுது கோபமும் வந்துவிட்டது.

"சீ, நாயே! புதிய நாயே! உனக்கு என்ன அத்தனை கர்வம்! இந்த வீட்டில் என்னை விரோதித்துக் கொண்டு யாரும் இருக்க முடியாது. தெரியுமா? நீ வாயைத் திறந்து பேசினால் என்ன, முத்து உதிர்ந்து விடுமோ?" என்று ரொம்பக் கோபத்துடன் கேட்டது டாமி.

அந்தப் புதிய நாய் விறைப்பாக உட்கார்ந்துகொண்டு பதில் பேசாமலிருந்தது.

"ஓகோ! அப்படியா சங்கதி! நீ ரொம்ப அழகாக இருக்கிறதாக எண்ணமோ? ஊரில் என் தம்பி இருக்கிறான். அவன் உடம்பு முழுக்கப் பழுப்பு நிறமாயிருக்கும்; பட்டு மாதிரி பளபளப்பாயிருக்கும். அவன் காதுகள் இரண்டும் தொங்கும் அழகு ஒன்றே போதுமே! அவனை விட நீ ஒன்றும் பிரமாதமாக அழகைப் படைத்துவிடவில்லை!" என்றது.

இத்தனை பேச்சையும் அந்தப் புதிய நாய் லட்சியமே செய்யவில்லை.

இந்தச் சமயம் பார்த்துப் பக்கத்து வீட்டுப் பையன் வேணு வந்தான். அவனைக் கண்டால் டாமிக்குப் பிடிக்காது. அவன் டாமியைத் துரத்தி அடித்து இம்சை செய்து விளையாடுவான். ஆகையினால் அவனைக் கண்டதும் டாமி பேசுவதை நிறுத்தி விட்டுப் பக்கத்திலிருந்த நாற்காலிக்கு அடியில் போய் நின்று கொண்டது.

வேணு ஓடிவந்து புதிய நாயின் தலையில் ஒரு குட்டுக் குட்டிவிட்டு ஓடிவிட்டான். அது உடனே கோபத்துடன் 'வள், வள்!' என்று குரைத்தது. டாமி உடனே வெளியே வந்து, "ஏ நாயே! பக்கத்துவீட்டு வேணுவை உனக்குத் தெரியாது. அவன் பொறுக்க முடியாமல் அடித்து விடுவான். இன்றைக்கு என்னவோ உன் அதிர்ஷ்டம் உன்னை மெதுவாகக் குட்டியிருக்கிறான்! இருக்கட்டும் நீ என் வீட்டில் இருந்துகொண்டு இப்படித் திமிருடன் அலட்சியமாயிருக்கக் கூடாது. உன் திமிரை ஒரு நொடியில் அடக்கி விடுகிறேன்!" என்று கூறி விட்டுப் புதிய நாயை நோக்கி ஓடியது.

அதைப் பார்த்துக்கொண்டே வந்த சரோஜா, "பிரேமா, இங்கே சீக்கிரம் வா அப்பா நேற்று இராத்திரி பம்பாயிலிருந்து வாங்கிக்கொண்டு வந்தாரே அந்த ஜப்பான் நாய், அதை நிஜம் நாய் என்று நினைத்து, நம்ம டாமி அதன்மீது பாய்கிறது!" என்றாள்.

பிரேமா ஓடிவந்து அந்தப் புதிய நாயை இடுப்பில் எடுத்து வைத்துக்கொண்டு அதன் தலையில் தட்டினாள். அது 'வள் வள்' என்று குரைத்தது. டாமி இதை அதிசயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தது.

# பழைய புஸ்தகம்!

மாலு

ராமநாதன் பழைய புஸ்தகங்களை வாங்கிச் சேகரித்து வைப்பதில் ரொம்பவும் ஆவல் உள்ளவன். கையில் காசு இருக்கும்பொழுதெல்லாம் ஏதாவது பழைய புஸ்தகத்தை வாங்குவதுதான் அவனுக்கு வேலை. ஒரு நாள் மூர்மார்க்கெட்டுக்குப் போய் பழைய புஸ்தகக் குப்பைகளைக் கிளறி ஒரு புஸ்தகத்தை வாங்கி எடுத்துக்கொண்டு வந்தான். வீட்டுக்கு வந்ததும் முதல் வேலையாக அந்தப் புஸ்தகத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான். இப்படி ஏடுகளைப் புரட்டும்போது அதற்குள்ளிருந்து ஒரு கடிதம் கீழே விழுந்தது. அது பழைய கடிதமாகத் தோன்றியது. அதற்குள் என்னதான் எழுதி யிருக்கிறது என்று பார்ப்போமே என்று நினைத்துப் படித்தான். கடிதத்தைப் படித்து முடித்தவுடன் ஏதோ காணாததைக் கண்டுவிட்டது போல ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்து விட்டுப் புஸ்தகத்தை மூடி வைத்து விட்டான். பிறகு அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை; உணவு செல்லவில்லை; உறக்கம் பிடிக்கவில்லை.

மறு நாள் தனக்குத் தெரிந்த நண்பர்களிடமெல்லாம் சென்று கெஞ்சிக் கூத்தாடி சுமார் ஐந்நூறு ரூபாய் வரைப் பணத்தைச் சேகரித்துக் கொண்டு சிதம்பரத்துக்கு ரயில் ஏறினான். ரயிலில் உட்கார்ந்ததும் ஒரு தரம் தான் வாங்கிய பழைய புஸ்தகத்தையும் அதில் இருந்த கடிதத்தையும் எடுத்துப் பார்த்துக் கொண்டான். ரயில் சிதம்பரம் போய்ச் சேரும் வரையில் அவன் தூங்கவே இல்லை!

அங்கிருந்து சுமார் பதினைந்து மைல் தூரத்தில் உள்ள பழைய நல்லூர் என்ற கிராமத்துக்குச் சென்றான். அந்த ஊர்க் கோயிலின் கீழ்ப்பக்கத்தில் உள்ள ஒரு நிலத்தை விலை பேசினான். ஐம்பது ரூபாய் கூடப் பெறாத நிலத்தை ஐந்நூறு ரூபாய் கொடுத்து வாங்கினான். அரை ஏக்கர் சுற்றளவுள்ள அந்த நிலத்தைச் சுற்றி வேலி எடுத்தான். சுமார் இருபது கூலி ஆட்களை வைத்துக்கொண்டு நிலம் பூராவையும் தோண்டினான். சுமார் பத்தடி ஆழம் தோண்டிய பிறகு எல்லா ஆட்களையும் அனுப்பி விட்டு, அந்த நிலத்தின் மத்தியில் ஒரு இடத்தில் தானே இரவோடு இரவாக ரொம்பவும் கஷ்டப்பட்டு சுமார் இருபது அடி ஆழம் தோண்டினான். கீழே பாறைத் தட்டுப் பட்டதால் அதற்கு மேல் தோண்ட முடியவில்லை. குழி தோண்டுவதை நிறுத்திவிட்டுத் தன் ஊருக்குத் திரும்பிவிட்டான். எங்கிருந்தோ வந்தான். சும்மாக் கிடந்த நிலத்தை ஐந்நூறு ரூபாய் கொடுத்து வாங்கினான். நிலம் பூராவையும் தோண்டிய பிறகு மூடி விட்டுப் போயிருக்கிறான் என்பது ஊரார் எல்லாருக்கும் ஒரு மூடுமந்திரமாக இருந்தது.

பட்டணத்துக்கு வந்த ராமநாதனுக்கு வீட்டில் பொழுது போகவில்லை. வழக்கம் போல் மூர்மார்க்கெட்டுக்குப் போய் பழைய புஸ்தகங்களைப் புரட்டிக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் ஒரு பெரியவர் நாலைந்து பழைய புஸ்தகங்களுடனும் அங்கு வந்தார். வந்தவர் பழைய புஸ்தகக் கடைக் காரனைப் பார்த்து "என்ன ஐயா, பழைய புஸ்தகங்கள் இருக்கிறது வாங்கிக் கொள்கிறீரா?" என்று கேட்டார்.

"இப்பொழுது கையில் காசு இல்லை சாமி. வேண்டாங்க" என்றான் கடைக்காரன்.

கடைக்காரனிடம் ஏதோ ரகசியம் பேசி விட்டு, "காசைப்பற்றி என்ன ஐயா அவசரம்? உம்மை எனக்குத் தெரியாதா என்ன? பிறகு வாங்கிக்கொண்டால் போகிறது" என்று சொல்லிப் புஸ்தகங்களை அந்தக் கடையில் போட்டுவிட்டுச் சென்றார்.

ராமநாதன் உடனே அந்தப் புஸ்தகங்களை எடுத்துப் பார்த்தான். ஒரு புஸ்தகத்திலிருந்து கடிதம் ஒன்று கீழே விழுந்தது. அதை எடுத்துப் பார்த்தான் கடிதம் மிகப் பழைய கடிதமாகவும் ரொம்ப வருஷங்களுக்கு முன்பு எழுதியது போலவும் இருந்தது. இதில் என்ன எழுதி யிருக்கிறது என்று ஆவலுடன் படித்தான். "சிதம்பரத்துக்கு மேற்கில் சுமார் பதினைந்து மைல் தூரத்தில் பழையநல்லூர் என்ற ஒரு கிராமம் இருக்கிறது. அந்தக் கிராமத்தில் இருக்கும் சிவன் கோவிலுக்கு மேற்புறத்தில் உள்ள நிலத்தின் மத்தியில் சுமார் இருபது அடி ஆழத்தில் ஒரு செப்புக் குடத்தில் இரண்டு லட்ச ரூபாய் பெருமானமுள்ள நகைகளை வைத்திருக்கிறேன். இந்தக் கடிதத்தைப் படிக்கும் பாக்கியம் உள்ள புண்ணியவான்களுக்கு அது சேரட்டும்" என்று எழுதி யிருந்ததைப் படித்தவுடன் அவனுக்கு அந்தப் பழைய புஸ்தகம், மூர்மார்க்கெட் எல்லாம் சுழலுவதுபோலிருந்தது. அப்படியே செயலற்று மரம்போல நின்றுவிட்டான் ராமநாதன்.

---



ஸ்டேஷன் மாஸ்டர் (முதல் வகுப்பு வண்டியின் ஏறப் போனவரைப் பார்த்து):—ஸார், ஸார்! இதில் ஏறாதீர்கள். இந்தக் கம்பார்ட்மெண்ட் கனம் மந்திரிக்கு ரிஸர்வ் செய்யப் பட்டிருக்கிறது.

அவர்:—நான்தான் அந்த கனம் மந்திரி!




## 63. தொழிலாளர் தியாகம்

**டா**ல்ஸ்டாய் பண்ணையிலிருந்து புறப்பட்டு வந்த பெண்மணிகள் நியூகாஸில் பட்டணத்தில் கைது செய்யப்பட்டார்கள் அல்லவா? அந்தப் பட்டணத்தை அடுத்திருந்த சுரங்கங்களில் ஆயிரக்கணக்கான இந்தியத் தொழிலாளிகள் வேலை செய்து கொண்டிருந்தார்கள். மேற்கூறிய பெண்மணிகளின் தியாகம் இந்தியத் தொழிலாளரின் உணர்ச்சியைத் தூண்டிவிடவே அவர்கள் வேலை நிறுத்தம் செய்துவிட்டுக் கூட்டம்கூட்டமாய் நியூகாஸில் பட்டணத்துக்குள் பிரவேசிக்கத் தொடங்கினார்கள்.

இதற்கிடையில் காந்தி மகாத்மாவும் நியூகாஸிலுக்கு வந்து சேர்ந்திருந்தார். மிஸ்டர் டி. லாஸரஸ் என்னும் தமிழ்க் கிறிஸ்துவரின் வீட்டில் அவர் தங்கினார். நியூகாஸில் பட்டணத்தில் பணக்கார இந்திய வியாபாரிகள் சிலர் இருந்தனர். முன் தடவைகளில் மகாத்மா நியூகாஸில் வந்தபோது அந்த வியாபாரிகள் வீட்டில் தங்குவது வழக்கம். ஆனால் இந்தத் தடவை போராட்டம் நடந்து கொண்டிருந்தபடியால் வியாபாரிகள் பயப்பட்டார்கள். மிஸ்டர் லாஸரஸ் பணக்காரர் அல்ல. கொஞ்சம் நிலமும் அதன் மத்தியில் ஒரு சிறிய வீடும் அவருடைய உடைமைகள். ஒப்பந்தத் தொழிலாளியாக வந்த குடும்பத்தை அவர் சேர்ந்தவர்.

அவரும் அவருடைய குடும்பத்தாரும் மூன்று பவுன் தலைவரி கொடுத்து வந்தார்கள். ஆகையால், ஏழைத் தொழிலாளிகளின் கஷ்டங்களை மிஸ்டர் லாஸரஸ் நன்கு அறிந்திருந்தார். டால்ஸ்டாய் பண்ணையிலிருந்து வந்த ஸ்திரீ சத்தியாக்கிரஹிகளை அவர்தான் வரவேற்று உபசரித்துத் தமது வீட்டில் தங்குவதற்கு இடம் கொடுத்தவர். இப்போது காந்தி மகானும் அவருடைய வீட்டிலேயே தங்கினார். இது காரணமாக லாஸர வீட்டுக்கு வருவோரும் போவோரும் பல ஆயினர். அவ்வளவு பேருக்கும் லாஸர தம்பதிகள் முகமலர்ச்சியுடன் உண அளித்து உபசரித்தார்கள்.

எனினும், தொழிலாளிகள் ஆயிர கணக்கில் வரத் தொடங்கிய பிற லாஸரஸின் சிறிய வீட்டில் எப்ப எல்லாருக்கும் இடம் இருக்கும்?

* * *

**சு**ரங்கங்களில் வேலை செய்த இந்திய தொழிலாளருக்குச் சொந்த வீடு கிடை யாது. சுரங்கச் சொந்தக்காரர்கள் கட்டி கொடுத்திருந்த சிறிய குடிசைகளி அவர்கள் வசித்து வந்தார்கள். அவர்க வசித்த வீதிகளில் விளக்குப் போட்டவ களும் தண்ணீர்க் குழாய்கள் வைத்து தந்தவர்களும் சுரங்கச் சொந்தக்கார களே. தொழிலாளிகள் வேலை நிறுத்த செய்தவுடனே வீதிகளில் போட்டிருந் விளக்குகள் அணைக்கப்பட்டன. குழாய் தண்ணீர் நிறுத்தப் பட்டது. குடிசை களைக் காலி செய்யும்படி உத்தரவு பிறந்தது. உடனே காலி செய்யாதவ களுடைய சாமான்கள் தெருக்களில் வீ எறியப்பட்டன. அப்படி எறிவதை தடுக்க முயன்றவர்கள் அடிக்கப்ப டார்கள். ஆனால் தென்னாப்பிரிக்காவி வசித்த இந்தியர்கள் அனைவரும் இத குள்ளே மகாத்மாவின் அஹிம்சைத் தத் வத்தைப் பற்றித் தெரிந்து கொண்டிருந் படியால் தொழிலாளி யாரும் பலா காரத்தைக் கையாளவில்லை. அதிகா களின் பலாத்காரத்தைப் பொறுமை யுடன் சகித்துக் கொண்டிருந்தார்கள்.

அப்படிச் சகித்துக் கொண்டிருந் ஸையது இப்ராஹிம் என்னும் பட்டா

பர் ஒருவர் மகாத்மாவிடம் வந்து தம் முதுகைக் காட்டினர். "என்னை எப்படி அடித்திருக்கிறார்கள், பாருங்கள்! நான் பட்டாணியன். அடியைப் பொறுத்துக் கொண்டு சும்மாயிருப்பது எனக்கு வழக்க மில்லை. ஆயினும் உங்களுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டுச் சும்மா யிருக்கிறேன்!" என்று சொன்னர்.

"உங்களுடைய பொறுமையைப் பாராட்டுகிறேன். உண்மையான தைரியம் இதுதான். உங்களைப் போன்றவர்களின் தீரத்தினால் நாம் நிச்சயம் வெற்றியடைவோம்!" என்றார் மகாத்மா.

ஆனல் இந்தப் பட்டாணியருக்கு நேர்ந்தது மற்ற எல்லாத் தொழிலாளருக்கும் நேரும் பட்சத்தில் இயக்கம் எத்தனை நாள் நடக்கும் என்ற சந்தேகம் மகாத்மாவுக்கு உதித்தது. அவர்களுக்கு ஏதாவது ஒரு வழி சொல்லியாக வேண்டும். மகாத்மா கவலையுடன் யோசித்துக் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தார். இந்தியத் தொழிலாளிகள் சுரங்க முதலாளிகளின் வீடுகளைக் காலி செய்துவிட்டு, அநாவசியமான சாமான்களை யெல்லாம் தூர எறிந்து விட்டு, அவசியமாக வேண்டிய துணிமணிகளையும் பாத்திரங்களையும் மட்டும் எடுத்துக் கொண்டு வந்துவிட வேண்டும் என்றார். இதற்குத் துணிச்சல் இல்லாதவர்கள் வேலைக்குத் திரும்பிப் போய்விடலாம் என்றும் கூறினர்.

ஆனல் ஒருவராவது திரும்பிப் போகவில்லை. தொழிலாளிகளும் அவர்களுடைய குடும்பத்தாருமாக ஆயிரக்கணக்கானவர்கள் காந்தி மகாத்மா காட்டிய வழியில் நடப்பதற்குத் தயாராக வந்து விட்டார்கள்..

அவ்வளவு பேருக்கும் உணவும் தங்க இடமும் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்தச் சமயத்தில் இந்திய வியாபாரிகள் உதவி செய்வதற்குத் தாங்களாகவே முன் வந்தார்கள். மூட்டை மூட்டையாக அரிசியும் பருப்பும் சமையல் பாத்திரங்களும் மற்ற அவசியமான பண்டங்களும் சேகரித்துத் தந்தார்கள். பண வசதி இல்லாதவர்கள் தொண்டு செய்வதற்கு முன்வந்தார்கள். எனவே, வேலையை விட்டு, வீட்டையும் விட்டு வெளிவந்த தொழிலாளிகளுக்குச் சாப்பாடு போடுவது சாத்தியமாயிற்று.

நல்ல வேளையாக அப்போது மழை காலமோ, குளிர் காலமோ இல்லையாதலால், திறந்த வெளியிலேயே தொழிலாளர் எல்லாரும் தங்கி யிருக்க முடிந்தது.

நாளுக்கு நாள் அத்தொழிலாளிகளின் கூட்டம் அதிகமாகிக் கொண்டு வந்தது. ஐயாயிரம் பேர் வரையில் சேர்ந்து விட்டார்கள். அத்தனை பேரையும் எத்தனை நாளைக்கு வேலையில்லாமல் வைத்துக்கொண்டிருக்கமுடியும்? மேலும் அந்த ஏழைத் தொழிலாளிகள் கல்வியறிவு இல்லாதவர்கள்; சுகாதார விதிகளை அறியாதவர்கள். தங்குகிற இடத்தைச் சுத்தமாக வைத்திருக்க அவர்களுக்குத் தெரியவில்லை. சுற்றுப் புறத்தில் எங்கே பார்த்தாலும் ஆபாசம் அதிகமாகிக் கொண்டு வந்தது. தொற்று வியாதி ஏதேனும் தொடர்ந்து விட்டால் பெரும் அபாயமாகப் போய்விடும்.

மேலும் அவ்வளவு பேருக்கும் மூன்று வேளை உணவு கொடுத்து எத்தனை நாளைக்கு வைத்துக் கொண்டிருக்க முடியும்? எவ்வளவு காலம் திறந்த வெளியிலேயே அவர்கள் வசிக்க முடியும்?

எனவே, காந்தி மகாத்மா கவலையுடன் சிந்தனை செய்து கடைசியில் ஒரு வழி கண்டு பிடித்தார். இந்தப் பெரிய தொழிலாளர் படையைக் கால் நடையாக டிரான்ஸ்வாலுக்கு அழைத்துச் செல்வது என்று தீர்மானித்தார்.




"என்பேரிலே யாதொரு தப்பும் இல்லே, கான்ஸ்டேபிள்! சும்மாவாவது, 'அடுத்த பட்டிட்டுலே வலியைக் குறைக்கப் போகிறேம்' என்றேன். உடனே மூர்ச்சை யடைந்து விழுந்து விட்டார்!"

ஐயாயிரம் பேர் அடங்கிய சத்தியாக்கிரஹிகளின் படை ஒரு மாகாணத்திலிருந்து இன்னொரு மாகாணம் செல்லும்போது சர்க்காருடைய நிலைமை என்னவாயிருக்கும்? அவ்வளவு பேரையும் சர்க்கார் கைது செய்வார்களா? கைது செய்துதான் தீரவேண்டும்; அல்லது ராஜி செய்து கொள்ள முன் வர வேண்டும்.

நியூகாஸில் நேட்டால் மாகாணத்தில் இருந்தது. அங்கிருந்து டிரான்ஸ்வால் மாகாண எல்லைக்கு 36 மைல். எல்லைப்புறத்தில் கைது செய்யாவிட்டால் அப்புறம் டால்ஸ்டாய் பண்ணை வரையில் நடத்தி அழைத்துப் போக மகாத்மா எண்ணியிருந்தார். அவ்வளவு தூரம் நடப்பதற்கு யாருக்காவது ஆட்சேபம் உண்டா என்று காந்திஜி இந்தியத் தொழிலாளரைக் கேட்டார். ஆட்சேபம் உள்ளவர்கள் திரும்பி வேலைக்குப் போய் விடலாம் என்றும் சொன்னார். ஒருவரும் திரும்பிப் போக முன் வரவில்லை. எல்லாரும் சத்தியாக்கிரஹ யாத்திரைக்குத் தயார் என்று சொன்னார்கள்.

* * *

**யா**த்திரைக்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்யப்பட்டு வந்த காலத்தில் டர்பனிலிருந்த சுரங்க முதலாளிகளிடமிருந்து மகாத்மாவுக்கு ஓர் அழைப்பு வந்தது. மகாத்மாவும் உடனே புறப்பட்டுச் சென்றார். முதலாளிகளின் தலைவர் மகாத்மாவைக் கடிந்து பேசினார். மூன்று பவுன் தலைவரி அரசியல் சம்பந்தமான பிரச்னை என்றும், தங்களுக்கும் அதற்கும் சம்பந்தம் இல்லையென்றும், ஆகையால் தொழிலாளிகளின் வேலை நிறுத்தம் சரியல்லவென்றும், அவர்களை உடனே வேலைக்குத் திரும்பிப் போகும்படி காந்திஜி செய்ய வேண்டும் என்றும் கூறினார்.

அரசாங்கத்தின் காரியத்துக்கு முதலாளிகளுக்கும் பொறுப்பு உண்டு என்றும், முதலாளிகளுக்கு வேலை செய்ய ஆட்கள் வேண்டியிருப்பதினாலேயே ஒப்பந்தத் தொழிலாளி முறை ஏற்பட்டதென்றும், ஆகையால் மூன்று பவுன் தலைவரியை எடுக்கும்படி முதலாளிகள் சர்க்காரை வற்புறுத்த வேண்டுமென்றும் காந்திஜி கூறினார். இந்த விவாதத்தினால் உடன்பாடு ஒன்றும் ஏற்படவில்லை. எனினும் பலன் இல்லாமற் போகவில்லை. சுரங்க முதலாளிகள் சர்க்காரோடு கடிதப் போக்குவரவு தொடங்கினார்கள்.

காந்திஜி நியூகாஸில் நகருக்குத் திரும்பி வந்ததும் படை கிளம்புவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் முடிவடைந்தன.

புறப்படுவதற்கு முன்னால், பிரயாணத்தின்போது அனுசரிக்க வேண்டிய விதிமுறைகளை இந்தியத் தொழிலாளிகளுக்கு மகாத்மா நன்கு எடுத்துக் கூறினார். வழியில் தலைக்கு ஒன்றரை ராத்தல் ரொட்டியும் ஒரு அவுன்ஸ் சர்க்கரையுந்தான் கொடுக்கப்படும்; அத்துடன் திருப்தி அடையவேண்டும். அவசியமான துணிகளைத் தவிர அதிகமாகக் கொண்டு வரக் கூடாது. ஒருவர் இன்னொருவருடைய சாமான்களைத் தொடக்கூடாது. வழியில் ஐரோப்பியர்கள் செய்யும் தொந்தரவுகளைப் பொறுமையுடன் சகித்துக்கொள்ள வேண்டும். அதிகாரிகள் கைது செய்தால் முக மலர்ச்சியுடன் செல்ல வேண்டும். காந்திஜி மட்டும் கைது செய்யப்பட்டால் மற்றவர்கள் நின்றுவிடாமலும் கலைந்து விடாமலும் யாத்திரையைத் தொடர்ந்து டால்ஸ்டாய் பண்ணை வரையிலும் போய்த்தான் நிற்கவேண்டும். டால்ஸ்டாய் பண்ணையிலும் கைது செய்யப் படாவிட்டால், அங்கே விவசாய வேலை செய்து ஜீவனம் தேடிக்கொள்ள வேண்டும்.

இந்த நிபந்தனைகளையெல்லாம் அத்தனை தொழிலாளிகளும் அறிந்துகொண்டு அவற்றின்படி நடக்க ஒப்புக்கொண்டார்கள். இதன்பேரில், 1913-ம் வருஷம் அக்டோபர் மீ 28உ மகாத்மாவின் தலைமையில் ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாகச் சுமார் ஐயாயிரம் பேருக்குமேல் அடங்கிய சத்தியாக்கிரஹப் படையின் யாத்திரை தொடங்கியது.

டிரான்ஸ்வால் எல்லைக்குச் சமீபத்திலிருந்த சார்லஸ் டவுன் என்னும் ஊர் வரையில் எல்லாரும் பத்திரமாகப் போய்ச் சேர்ந்தார்கள். அந்தப் பட்டணத்தில் சில நாள் தங்குவது என்று மகாத்மா உத்தேசித்திருந்தார். ஏனெனில் அங்கிருந்து சர்க்காருக்கு ஒரு கடிதம் எழுதிப் பதில் வருகிறதா என்று பார்க்க விரும்பினார். சார்லஸ் டவுன் மிகவும் சிறிய ஊர். அங்கே குடியேறியிருந்த இந்திய வியாபாரிகள் சத்தியாக்கிரஹிகளுக்கு வேண்டிய அரிசியும் பருப்பும் கொடுத்து உதவ முன்வந்தார்கள். திறந்த வெளியிலேயே எல்லாரும் தங்க வேண்டியிருந்தது. சமையல் செய்தல், பரிமாறுதல், தங்கும் இடத்தைச் சுத்தமாக வைத்திருத்தல் ஆகிய காரியங்களை நடத்துவதில் பெரும் சிரமம் ஏற்பட்டது. காந்திஜியே முன்னின்று இந்தக் காரியங்களைச் செய்தபடியினால்தான் சமாளிக்க முடிந்தது. மற்றவர்களை வேலை செய்யும்படி ஏவுவதுடன் மகாத்மா திருப்தியடையவில்லை. அவரும் அவருடைய பிரதம சகாக்களும் குப்பையைப் பெருக்

த் தனித் தங்குமிடத்தைச் சுத்த மாக்குவதில் முதன்மையாக நின்றார்கள்.

சமையல் விஷயத்திலும் பரிமாறும் விஷயத்திலும் அடிக்கடி சண்டை சச்சரவு நேர்வதா யிருந்தது. காந்திஜியே பரி மாறும் வேலையின் முழுப் பொறுப்பையும் ஒப்புக்கொண்டார். அதற்குப் பிறகு 'சமையல் நன்றாயில்லை' என்றோ, 'சாப் பாடு போதவில்லை' என்றோ புகார் செய்யத் தயங்கினார்கள். யாராவது புகார் செய்தாலும் காந்திஜியின் சாந்த மான பதிலைக் கேட்டு அடங்கினார்கள்.

இதற்கிடையில் தென்னாப்பிரிக்காவின் ஐக்கிய சர்க்காருக்கு மகாத்மா காந்தி கடிதம் எழுதினார். "ஐயாயிரத்துக்கு மேற் பட்ட தொழிலாளிகளுடன் டிரான்ஸ் வால் எல்லைக்கருகில் வந்திருக்கிறேன். டிரான்ஸ்வாலில் நிலையாகத் தங்கும் உத் தேசம் இல்லை. மூன்று பவுன் தலைவரி யைக் கண்டிப்பதற்கு அறிகுறியாகவே மாகாணத் தடைச் சட்டத்தை மீறி டிரான்ஸ்வாலுக்குள் புகப்போகிறோம். எல்லைப்புறத்திலேயே எல்லாரையும் சர்க்கார் கைது செய்ய முன் வந்தால் அதற்குத் தயாரா யிருக்கிறோம். திருட் டுத்தனமாகச் சட்டத்தை மீறும் எண்ணம் கிடையாது. பகிரங்கமாகவே மீறப் போகிறோம். மூன்று பவுன் தலைவரியை ரத்து செய்ய சர்க்கார் ஒப்புக்கொண்டால் தொழிலாளிகள் உடனே திரும்பிச் சென்று பழையபடி சுரங்க வேலையில் ஈடு படுவார்கள்." — இதுதான் மகாத்மா காந்தி எழுதிய கடிதத்தின் சாராம்சம். கடிதத்தை எழுதிவிட்டு மகாத்மா சில நாள் பதிலுக்காகக் காத்திருந்தார். பதில் ஒன்றும் வரவில்லை. தந்தி கொடுத்திருந் தார். அதற்கும் பதில் இல்லை. மகாத்மா மறுபடியும் ஒரு முயற்சி செய்ய எண்ணி, பிரிட்டோரியாவில் இருந்த தளபதி ஸ்மட் ஸின் காரியதரிசியை டெலிபோனில் கூப் பிட்டுப் பேசினார். கடிதத்தில் எழுதிய விஷயத்தை ஞாபகப்படுத்திப் பதில் வேண்டும் என்று கேட்டார். கடைசி யாக, டெலிபோனில் பதில் வந்தது. "தளபதி ஸ்மட்ஸ் உம்முடன் எந்தவித சம்பந்தமும் வைத்துக்கொள்ள விரும்ப வில்லை. உம்முடைய இஷ்டம்போல் நீர் செய்யலாம்" என்பதுதான் பதில்.

இதற்குமேலே உத்தேசித்த காரி யத்தை நடத்துவதைத் தவிர வேறு வழி யில்லை. எனவே 1913-ம் வருஷம் நவம்பர் மாதம் 6ந் தேதி அதிகாலையில் கடவுளுக்குப் பிரார்த்தனை செலுத்திவிட்டு மகாத்மா காந்தி சத்தியாக்கிரஹப் படையுடன் சட்டத்தை மீறி மாகாணத்தின் எல்லை யைக் கடப்பதற்காகப் புறப்பட்டார்.

# காலக்ஷேபம்

**காதலி** :—நேற்று என் தகப்பனாரிடம் நமது விவாக விஷயமாகப் பேசினீர்களா?

**காதலன்** :—ஆகா! வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தேன்.

**காதலி** :—உங்களுக்கு இருக்கும் ஆஸ்தி யைப் பற்றிச் சொன்னீர்களா?

**காதலன்** :—இருபதாயிரம் ரூபாய் பாங்கி யில் இருக்கிறது என்றேன்.

**காதலி** :—அப்பா என்ன சொன்னார்?

**காதலன்** :—உடனே அவர் இரண்டாயிரம் ரூபாய் கடன் கேட்டார்!



**பாலு** :—ஒரு பயல் முகத்திலே பளீர் என்று ஒரு அறைவிட்டேன், பாரு! அவன் ஓடின ஓட்டத்தை நீ பார்க்கவில்லையே!

**விச்சு** :—அடே அப்பா! நிஜமாகவா?

**பாலு** :—ஆமாண்டா! கடைசி வரை அவன் கையிலே நான் பிடிபடாமல் ஓடிப் போய்க் கதவைச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டேன்!



"நீ என்னைப் பற்றிக் கன்னாபின்னா என்று தூஷிக்கிறாயாமே!"

"சேச்சே! ஒருநாளும் இராது! அது என் வழக்கமே இல்லை. ஒரு மனுஷனைப் பற்றி நல்லதாக அணுவளவேனும் இருந் தால் பேசுவேன்; இல்லாவிட்டால் பேச மாட்டேன். அப்படி இருக்க, உன்னைப்பற்றி என் வாயைத் திறக்கப் போகிறேன்!"



**உபாத்தியாயர்** :—என்ன ராமு, ஸ்காத் லாந்தின் வட பகுதியில் வீசும் பனியை வர்ணித்து ஒரு கட்டுரை எழுதச் சொன் னால், "......அங்கு சமீபத்திலிருந்த ஒரு குன்றிலிருந்து ஓர் ஆடு குதித்துக்கொண்டு கீழே வந்தது. அப்போது மூடு பனி மிகு தியா யிருந்தபடியால் ஆடு அந்தப் பனியில் மறைந்து வானத்திலேயே உறைந்து விட் டது" என்று எழுதியிருக்கிறாயே! ஆடு எப்படி மேலேயே இருந்துவிட முடியும்?

**ராமு** :—பூமியின் ஆகர்ஷண சக்தியுடப் பனியில் உறைந்து விட்டது, ஸார்!

# சிதைந்த கோட்டை

துஷ்யந்தன் ☆☆☆

கல்லும் புல்லும் கதை சொல்லுமோ
ன்னவோ, அது வசந்தாவுக்குத் தெரி
ாது. அப்படி அவை எதாவது சொன்ன
ும் அந்த அசட்டுக் கதைகளைக் கேட்க
வன் தயாராயில்லை. அப்படியிருந்தும்
ந்த மங்கிய நிலவொளியில் சற்றுத்
ாரத்தில் தெரிந்த தஞ்சை அரண்மனை
ாளிகைகளின் நிழலுருவம் அவன் நெஞ்
சக் கவர்ந்து விட்டது. ஆயிரமாயிரம்
தைகளை அந்தப் பாழடைந்த கோட்டை
சால்லிக் கொண்டிருந்தது. பழமையின்
ம்பீரமே அங்கேதான் தேங்கி நிற்பது
பால இருந்தது. கோட்டை சிதைந்து
பாய்விட்டாலும் அங்கே எத்தனையோ
ருஷங்களுக்கு முன்னால் அரசாண்டு
ந்த அரசர்களின் பெருமை நிழலிட்டுக்
காண் டிருந்தது. அந்தப் பேரழகைப்
ார்த்துக் கொண்டே வசந்தா ஜன்ன
ருகே நின்றுவிட்டான்.

"என்ன வசந்தா, நேரமாகவில்லையா
டுக்க? எல்லாம் காலைக்குப் போய்ப் பார்த்
துக் கொள்ளலாம், அந்த அரண்மனை
ழகை! இப்பொழுது படுத்துக் கொள்."

அப்பாவின் சொற்கள் அவனை மீண்டும்
ய உணர்வுக்குக் கொண்டு வந்தன. அது
ரை அவன் தன்னையே மறந்து அந்த
ட்டாப் பழம்பெருமையில் மூழ்கிப்
போயிருந்தான். போதையிலிருந்து தெளிந்த
குடியனைப் போல அவன் மெதுவாகப் படுக்
கைக்குப் போனான். இரவெல்லாம் அரண்
மனைக் கனவுகள்தான்!

காலையிலெழுந்ததும் அப்பாவை அரண்
மனையைப் பார்த்துவிட்டு வரலாமென்று
அழைத்தான். அவனுடைய பிடிவாதத்
திற்காகத்தான் அவரும் தஞ்சைக்கு வந்
திருந்தார். ராஜா சத்திரத்தின் அதிதிகளாக
அப்பனும் மகனும் இருந்து வந்தனர்.
னால் எழுந்தது முதல் அவருக்குத் தலை
வலி; ஆகவே தயங்கினார். அவனும் பொறுத்
துப் பார்த்தான்; அவர் கிளம்புவதாகவே
இல்லை. வசந்தா தனியாகவே புறப்பட்டு
விட்டான். என்ன, நேர் வழிதானே,
பார்த்துக் கொள்ளலாமென்ற நம்பிக்கை.

மாடி அறையிலிருந்து கீழே இறங்கி வாசற் கதவருகில் வந்துவிட்டான். எதிரே யாரோ ஒரு அம்மாஞ்சி வருவது தெரிந்ததும் கொஞ்சம் நின்றான். அவன் வசந்தாவுக்கு மட்டுமல்ல, அந்த ராஜா சத்திரத்திற்கு வரும் எல்லோருக்குமே அம்மாஞ்சிதான்!

வசந்தாவைப் பார்த்ததும் அந்த அம்மாஞ்சி நின்று விட்டான். பிறகு தயங்கிய படியே, "வந்து..." என்று இழுத்தான்.

"என்ன வந்து...?"

"வந்து...எங்கே தனியாகக் கிளம்பி விட்டாய்?"

"சும்மா, அரண்மனையைப் பார்க்கத் தான்! ஏன், ஏதாவது ராஜாப் பிசாசு அங்கே இருக்கிறதோ?" என்று வசந்தா குத்தலாகக் கேட்டான்.

"இல்லே, வந்து..."

"அட, உன் வந்து அப்புறம் இருக்கட்டும், விஷயத்தைச் சொல்?" என்று சீறினான் வசந்தா.

"வந்து...ஒன்றுமில்லை. அங்கே யாரோ ஒரு பைத்தியம் அடிக்கடி வந்து..."

அவன் முடிப்பதற்குள் வசந்தா குறுக்கிட்டு, "சரிதான், உன் கதையை ஆரம்பித்து விட்டாயா?" என்றான்.

"இல்லையே, வந்து...அவன் நன்றாகப் படித்தவனும். ரொம்பப் படித்தவனும். அதுதான் கொஞ்சம் சரித்திரப் பைத்தியம் பிடித்துவிட்டது. எப்பொழுதும் தன்னை ஒரு இளவரசன் என்று நினைத்துக் கொண்டு விடுகிறான்!"

"போனால் போகட்டுமே, அதனாலென்ன?"

"வந்து......யாராவது அவன் சொல்வதை எதிர்த்துப் பேசினால் அவனுக்குக் கோபம் வந்து விடுமாம். அதனாலே நீ ஒரு சமயம் அவனைப் பார்த்தால் அவன் பேச்சை எதிர்த்துப் பேசாமல் இருக்க வேண்டும். அவன் போக்கிலேயே அவனை விட்டுவிட்டால் உன்னை ஒன்றும் செய்ய மாட்டான். அவ்வளவுதான்! நான் கூட உன்

னுடன் வருவேன், இப்பொழுது அவசரமாகக் கொஞ்சம் வெளியே போகவேண்டியிருக்கிறது; நீ பயப்படாமல் போ!"

அம்மாஞ்சியின் பதிலை எதிர்பார்க்காமலே வசந்தா போய்விட்டாள்.

'நல்ல பைத்தியம்' என்று நினைத்துக் கொண்டே வசந்தா அரண்மனையை நோக்கி நடந்தாள்.

## 2

எங்கெல்லாமோ சுற்றி யலைந்து பார்த்துவிட்டு வசந்தா ராணி மண்டபத்தருகில் வந்து நின்றாள். ஏழடுக்கு மாளிகை அது. மேலே ஏறிப் போகலாமா, வேண்டாமா என்ற யோசனையில் அவள் மூழ்கியிருந்த சமயம் எதிரே யாரோ ஒரு வாலிபன் வருவது தெரிந்தது. ஒரு சமயம் அந்தச் சரித்திரப் பித்துத்தானோ என்னமோ? அவனைப் பார்த்ததும் அவளுக்குப் பயமாகத்தானிருந்தது. இருந்தாலும் அவனைப் பார்த்தால் அப்படியொன்றும் விபரீதமாக நடந்துகொள்ளக் கூடியவன்போல இல்லை. கண்களில் கொஞ்சம் பரிதாபத் தோற்றம் இருந்ததே தவிர, கோபமோ மற்றதோ புலப்படவில்லை. அவன் நல்ல அழகனாகவே இருந்தான். பாவம், இவனு பைத்தியம்? என்னவோ ஒரு அசட்டுத் தைரியம் அவளுக்கு ஏற்பட்டது. அவன் போக்குக்கே அவனை விட்டு அவனிடமிருந்து எப்படியாவது தப்பி விடலாமென நினைத்தாள். மெதுவாக அவன் பக்கம் அவள் திரும்பவே அவன் பேச ஆரம்பித்து விட்டான்.

"இளவரசி இங்கு வந்து வெகு நேரம் ஆகிவிட்டதோ?"

வசந்தாவுக்கு முதலில் தூக்கி வாரிப் போட்டது. பிறகுதான் அம்மாஞ்சியின் வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. சரிதான், தன்னை இளவரசனுக்கிக் கொண்டவன் நம்மை இளவரசி யாக்கி யிருக்கிறான்! ஆனால் அதை மறுத்துப் பேசக் கூடாது என்று அம்மாஞ்சி சொன்னதும் நினைவுக்கு வந்தது. தட்டுத் தடுமாறிக் கொண்டே சொன்னாள்:

"இல்லை, இப்பொழுதுதான் வந்தேன். நீங்கள்..."

அதற்கு மேல் என்ன சொல்வதென்று வசந்தாவுக்குத் தெரியவில்லை. அத்துடன் நிறுத்தி விட்டாள். ஆனால் அவன் தயங்காமல் பதில் அளித்தான்.




"தேவி, நான்தான் அமலாதித்யன், வேங்கி நாட்டு அரசன். உங்கள் கைதி. குந்தவை!... இல்லை, இளவரசி!...உங்களைப் பார்த்துவிட்டுப் போகத்தான் வந்தேன்; பார்த்துவிட்டேன். ஆனால் திரும்பிப் போக மனமில்லை......!"

வசந்தாவுக்கு அடக்க முடியாத சிரிப்பு வந்தது. கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள். நல்ல தேர்ந்த அறிவாளி. சரித்திரத்தின் ஏடுகளைக் கரைத்துக் குடித்திருப்பான்போல இருக்கிறதே! அவன் அமலாதித்யனும், நான் இளவரசி குந்தவையாம்! நல்ல பைத்தியம்! ஆனால் தப்பிப் போக வேண்டுமே! வேறு வழியில்லை; பேசாமல் குந்தவை யாகிவிட வேண்டியதுதான். அவனை அப்புறப் படுத்த என்ன செய்யலாம்? சட்டென்று ஒரு யோசனை தோன்றவே, அவள் அவனைக் கேட்டாள்:

"ஆமாம், நீங்கள் இப்படி இங்கு வந்தால் உங்களை அரண்மனைச் சேவகர்கள் தேடமாட்டார்களா?"



இதைக் கேட்டாவது அவன் போய் விடுவான் என்றுதான் அவள் நினைத்தாள். ஆனால் அவன் அசைவதாக இல்லை. உடனே பதில் மட்டும் வந்தது.

"இல்லை, தேவி, நான் கைதிதான். இருந்தாலும் தஞ்சைக் கோட்டையின் உட்புறத்தில் எங்கு வேண்டுமானாலும் போகலாம். நான் ஓடிப் போய்விட மாட்டேனென்று உங்கள் அப்பாவுக்கு நன்றாகத் தெரியும். ராஜ ராஜ சோழர் கம்பீர மான புருஷர், தேவி! அவர் கைதிக்கும் அன்பு காட்டுகிறார்!"

வசந்தாவுக்கு ஒன்றும் புரியவில்லை. அவள் சரித்திரத்தை ஏதோ பரீட்சைக்காகப் படித்திருந்தாளே தவிர, அதை ஆராய்ச்சி செய்து பார்க்கவில்லை. ஆனால் எங்கேயோ படித்தது நினைவிருந்தது. ராஜ ராஜ சோழரின் மகளான குந்தவை தன் அப்பாவின் கைதியான வேங்கி நாட்டு மன்னன் அமலாதித்யனைக் காதலித்ததும், பிறகு அவனையே மணந்து கொண்டதும் மட்டும் அவளுக்குத் தெரியும். கடவுளே, இந்தச் சரித்திரப் பைத்தியத்தினிடமிருந்து எப்படித் தப்பலாம்? அவள் தீவிரமாக யோசனை செய்து கொண்டே வெளியில் யாராவது வருகிறார்களா என்று பார்ப்பதற்காக எட்டிப் பார்த்தாள். ஒருவரும் வரவில்லை.

இந்தச் சமயத்தில் அவன் ஒரு அடி முன் வைத்து அருகில் வந்து நின்று கேட்டான்:

"தேவி, கீழே இறங்கிச் சிவ கங்கைப் பக்கம் வருகிறீர்களா? எனக்கு அந்த இடம்தான் பிடித்திருக்கிறது. எங்கள் நாட்டில் கோதாவரி நதிக் கரையின் அழகைப் போல் தஞ்சை நாட்டில் இந்த ஒரு இடத்தில்தான் அழகு இருக்கிறது. அங்கே போகலாமா?"

தர்மசங்கடமாயிருந்தது அவளுக்கு. அவனுடன் கீழே இறங்கிப் போகவும் துணிவில்லை. அவனும் அவளை விட்டுப் போவதாக இல்லை. அவன் சரித்திரத்தை உருப் போட்டு வைத்திருந்தான். அதிலிருந்து என்னவெல்லாமோ சொன்னான். வசந்தா யோசித்துத்தான் எதையும் சொல்ல வேண்டியிருந்தது. ஒரு சமயம் ஏதாவது தாறுமாறாய் உளறி அவனுக்குக் கோபம் வந்து விட்டால்...?

வெகுநேரம் யோசித்து விட்டுப் பதில் சொன்னாள்:

"மன்னிக்க வேண்டும். நான் என் அண்ணா ராஜேந்திரனுக்காகக் காத்திருக்கிறேன். நீங்கள் வேண்டுமானால் சிவகங்கை நந்த வனத்திற்குப் போய் வாருங்கள். அண்ணா இங்கு வரும்போது உங்களைப் பார்த்தால்..."

வசந்தா முடிப்பதற்குள் அவன் ஆரம்பித்தான்:

"இல்லை, ராஜேந்திர சோழர் இப்பொழுது இங்கு வரமாட்டார், தேவி! அவருக்காகச் சக்கரவர்த்தி ராஜராஜர் கொலு மண்டபத்தில் காத்திருக்கிறார். வடக்கே சென்று வெற்றியுடன் வந்ததற்காக அவருக்கு வரவேற்பு விழா நடக்கப் போகிறது. அதோ பாருங்கள், வெற்றி முரசு கொட்டுகிறது! புலிக் கொடியும் கம்பீரமாகப் பறக்கிறது! நீங்கள்கூட இப்பொழுது கீழே இறங்கி வந்து வேடிக்கை பார்க்கலாம்; நன்றாயிருக்கும்."

தன்னை எப்படியாவது கீழே இறங்கச் செய்ய அவன் முயல்வது போல் இருந்தது அவளுக்கு. எதற்காக இருக்கும்? ஊகம் என்னவானாலும் சரி, இறங்குவதில்லை.



ஹோட்டல் முதலாளி:—அடே! எல்லாருக்கும் கலக்கிற ஸ்பெஷல் காப்பியை எனக்கும் கொண்டு வந்து விடாதே! பக்கத்து ஹோட்டலுக்குப் போய் நல்ல காப்பியாக ஒரு கப் வாங்கிக் கொண்டு வா!

---

அவன் கடகடவென்று பேசுவது அவளுக்கு வியப்பாகவே இருந்தது. என்னமோ பரம்பரை அரசர் குலத்தில் பிறந்து வளர்ந்தவன் போலப் பேசுகிறானே! அவன் மட்டும் நிஜமாகவே இளவரசனாயிருந்தால்...? நல்ல பைத்தியம்! வெற்றி முரசு கொட்டுகிறதாம், ஒரு மண்ணாங்கட்டியும் காணோம்! தூரத்தில் யாரோ ஒருவன் நாடக விளம்பரத்திற்காகத் தம்பட்டம் அடித்துக் கொண்டு போகிறான். அதுதான் முரசொலிபோலிருக்கிறது! புலிக் கொடி பறக்கிறதாம்! எங்கே? யாரோ ஒருத்தி வீட்டின் மாடியில் சேலையை உலர்த்தியிருக்கிறாள். அதுதானா புலிக்கொடி?

இப்படியும் ஒரு பைத்தியம் இருக்குமா? அவளால் நம்ப முடியவில்லை. ஆனாலும் எதிரே நிற்கும் அவனைப் பார்த்துக் கொண்டேயிருக்கும்போது எப்படி நம்பாமல் இருப்பது? அவனிடமிருந்து தப்ப வழியே கிடையாதா என்று ஏங்கினாள் அவள்.

இந்தச் சமயத்தில் அவளுக்கு ஒரு புது யோசனை தோன்றிற்று. அவனை எப்படியாவது மேல் அடுக்குகளுக்கு அனுப்பி விட்டால் பிறகு கீழே இறங்கிப் போய் விடலாமல்லவா? உடனே அதற்கு ஒரு அடி போட்டாள்.

"அதோ பாருங்கள், ஒரே புழுதி மயமாயிருக்கிறது! எதிரிகள் படையெடுத்து வருகிறார்கள் போலிருக்கிறது! கொஞ்சம் மேலே ஏறிப் பார்த்து விட்டு வாருங்களேன்!"

அவள் சூழ்ச்சிக்கெல்லாம் அவன் கட்டுப் படுபவனாக இல்லை. எல்லாம் தெரிந்தவன் போல மௌனமாய் நின்றான். பிறகு சாவகாசமாக, "இளவரசி பயப்பட வேண்டியதில்லை. அது நம்முடைய சேனைதான்! வெற்றி விழாக் கொண்டாட்டத்துக்காக அணி வகுத்து வருகிறது!" என்று சொன்னான்.

அவள் திகைத்துப் போய்விட்டாள். அவன் சாமான்யமாக அயர்ந்து விடுவான் என்று நினைத்தது தவறு என்பது புலப்பட்டது. இன்னும் எவ்வளவு நேரம்தான் இப்படிக் குர்த்தனையாகவே இருக்க முடியும்?

## 3

எவ்வளவு நேரம் இப்படியாகக் கலக்கத்தில் கழிந்ததோ அவளுக்குத் தெரியாது. தன்னைச் சுற்றி ஒரு முறை பார்த்தாள். வௌவால்களுக்கே உரிய தனி மணமும் நாசம் தவிர வேறொன்றும் காணவில்லை.

கைப்பிடிச் சுவரில் சாய்ந்து வெளியே எட்டிப் பார்த்தாள்; கீழே யாரும் வரவில்லை. கடைசியாக ஒரு முயற்சி செய்து பார்த்தாள், அவனை அப்புறப்படுத்த.

"வேங்கி நாட்டு மன்னரான தாங்கள் இவ்வாறு சாதாரண உடையில் இருப்பது நன்றாயில்லை. வெற்றி விழாக் கொண்டாட்டத்தில் நீங்களும் கலந்து கொள்ள வேண்டாமா?—போங்கள், முத்தாரமும் கனக மணிகளும் அணிந்து......"

"தேவி, நான் கைதி என்பதைத் தாங்கள் மறந்து விட்டீர்கள். எனக்கு எதற்கு முத்தாரமும் மணிகளும்? என் கை வாள் என்னிடமிருந்து பறிக்கப்பட்டு விட்டதே!"

அவளுக்குப் பகீரென்றது. வாள் என்று சொன்னதும் அவள் வெலவெலத்துப் போய்விட்டாள். பயந்து விலகிப் போய்ச் சுவரில் சாய்ந்து மறுபடியும் வெளியே பார்த்தாள்.

இந்தச் சமயத்தில்தான் அவள் எதிர்பாராத சம்பவம் நடந்துவிட்டது. திடீரெனப் பாய்ந்து அவளை இறுகப் பிடித்துக் கொண்டு அவன் கத்தினான்:

“முடியவே முடியாது! என் கண் முன்னாலே நீ கீழே விழுந்துவிட முடியாது!”

அவளுக்கு நினைவு தவறும் போல இருந்தது. பயம் எல்லை கடந்துவிட்டது. அவன் பிடியிலிருந்து விலக முயற்சி செய்யத் திரும்பியபோது யாரோ வேகமாகப் படிகளில் ஏறி வருவது தெரிந்தது.

அம்மாஞ்சி ஓடி வந்து நின்று சத்தம் போட்டான்.

“சுந்தரமூர்த்தி! அவளைச் சும்மா விடு; அவள் கீழே விழமாட்டாள். அவள் ஒன்றும் பைத்தியமில்லை!”

வசந்தாவுக்கு இது புரியவில்லை. பைத்தியமும் அம்மாஞ்சியை விழித்துப் பார்த்தான். அம்மாஞ்சி விழுந்து விழுந்து சிரித்தான். “ஆமாம், நிஜமாகவே இவனைப் பைத்தியமென்று நினைத்து விட்டாயா? இல்லை வந்து...” என்று அவன் ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

வசந்தாவுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. “போதும் உன் வந்து......!” என்று எரிந்து விழுந்தாள்.

அம்மாஞ்சி வசந்தாவிடம் வெறும் பொய் தான் சொல்லியிருந்தான். சுந்தரமூர்த்திக்குப் பைத்தியமும் கிடையாது, ஒன்றும் கிடையாது. ஆனால் அம்மாஞ்சி அவனிடம் போய், அரண்மனைக்குப் போனால் அங்கே ஒரு பெண் வருவாளென்றும் அவள் எப்பொழுதும் ராணி மண்டபத்திலிருந்து கீழே விழுந்துவிட முயற்சிக்கிறாள் என்றும் கதையளந்து விட்டிருந்தான். அவளுக்குச் சரித்திரப் பைத்தியம் பிடித்திருப்பதாகவும் தன்னை ஒரு இளவரசி என்றே அவள் நினைத்துக்கொண்டிருப்பதாகவும் சொல்லியிருந்தான். இதனால் விளைந்த விபரீதம் தான் இது. அதே காரணத்தாலேயே அவளை விட்டு நகராமல் அவள் பேச்சுக்கு இசைந்தே தாளம் போட்டு நின்றான் சுந்தரமூர்த்தி. கடைசியில் அவள் வெளியே எட்டிப் பார்த்தபொழுது அவன் உண்மையாகவே பயந்து விட்டான். அவள் கீழே விழத்தான் முயற்சி செய்கிறாள் என்று எண்ணி அவளைப் பிடித்து நிறுத்தி விட்டான்.

இதை அறிந்ததும் இருவருக்கும் எப்படி இருந்திருக்கும்? சுந்தரமூர்த்திக்கு அம்மாஞ்சியைப் பிடித்து அப்படியே அடித்துக் கொன்று விடலாமா என்று தோன்றிற்று.

தன்னிடம் வந்து வசந்தா பைத்தியமென்று சொல்லிவிட்டு, அவளிடம் போய் தன்னையே பைத்தியமென்று சொல்லியிருக்கிறானே, பாவி!

அம்மாஞ்சி அதற்குமேல் நின்றால் உதை விழுமென்று அஞ்சி அங்கிருந்து மெல்ல நழுவி விட்டான். திகைப்பு நீங்கியதும் மெல்ல அவளைப் பார்த்தான் சுந்தரமூர்த்தி. வசந்தா சிரித்துக் கொண்டே கேட்டாள்:

“இன்னும் நீங்கள் என் கைதிதானா, இல்லை, போய் முத்தும் மணியும் அணிந்து வரப் போகிறீர்களா?”

தயங்காமல் சுந்தரமூர்த்தி சொன்னான்:

“இல்லை, தேவி! நான் என்றும் உங்கள் கைதிதான்! எனக்குப் பொன்னும் மணிகளும் வேண்டாம்; உங்கள் அன்பு இருந்தால் போதும்!”

இருவரும் சிரித்துக் கொண்டே வழி நடந்தார்கள். அம்மாஞ்சியைக் கோபித்துக் கொண்டாலும் உள்ளுக்குள் தங்களை இளவரசனும் இளவரசியுமாக்கி ராணி மண்டபத்தில் சேர்த்து வைத்த அவனை அவர்கள் வாழ்த்தினார்கள். ஆமாம், சிதைந்து போன கோட்டையில் பிறந்த காதல் மட்டும் சிதைந்து போகவில்லை!

குந்தவையும் அமலாதித்யனும் உண்மையாகவே மணந்து கொண்டனர். வேண்டுமானால் நீங்கள் ஸ்ரீமதி வசந்தா சுந்தரமூர்த்தியைக் கேட்டுப் பாருங்கள்!

---



“உன் வயதிலே நான் பள்ளிக்கூடத்திலே படிக்கும்போது ஒரு பிரைஸ் அடித்தேன்! ஆனால் எதற்கு என்றுதான் தெரியவில்லை!”
“ஒருவேளை உங்களுடைய ஞாபக சக்திக்காக இருக்கும், அப்பா!”
“அதுதான்டா, அதுதான்! இப்போது தான் ஞாபகம் வருகிறது!”

# பிரசாரத்தில் புது திருசு!

ரஜனி

கொழும்பு, பிப்ரவரி. 1.

சிங்கள சமூகமும் சில சிங்களப் பத்திரிகைகளும் ஒரு புதுமாதிரியான பிரசாரத்தை இப்பொழுது ஆரம்பித்திருக்கின்றன. இலங்கை இந்தியர்களில் 100-க்கு 99 பேர் சென்னை மாகாணத் தமிழர்கள். பாக்கி ஒருவர்தான் வட இந்தியர். இதை நன்கு அறிந்த சிங்களவர்கள் தங்களுக்கு இந்தியாவிடமோ அல்லது இந்தியர்களிடமோ வெறுப்பில்லையென்றும், மதராஸிகளை மட்டுமே தாங்கள் வெறுப்பதாயும், வட இந்தியாவில்கூட மதராஸிகளைக் கண்டால் யாருக்கும் பிடிப்பதில்லையென்றும், இந்தியாவின் 'யூதர்'களான மதராஸிகளை இலங்கையிலிருந்து விரட்டியடிப்பது தேச சேவை யென்றும் பிரசாரம் செய்து வருகிறார்கள்.

பம்பாயில் சுமார் பதினைந்து வருஷ காலம் வியாபாரம் செய்து கொள்ளை லாபம் சம்பாதித்த திரு குணசேகரா என்ற ஒரு சிங்களவர் போன வாரம் இலங்கைக்குத் திரும்பியிருக்கிறார். வட இந்தியா முழுவதும் மதராஸிகளை வெறுத்து ஒதுக்கித் தள்ளியிருப்பதாக அவர் ஒரு பேட்டியில் சொல்லியிருப்பதாக இலங்கை ஆங்கில தினசரியொன்று ஒரு செய்தியை முதல் பக்கத்தில் பிரபலமாகப் பிரசுரித்தது. அச் செய்தியைத் தொடர்ந்து மதராஸிகள்மீது துவேஷப் பிரசாரம் வெகு கடுமையாக நாடெங்கும் நடைபெற்று வருகிறது.

இலங்கையிலுள்ள முஸ்லிம்களுக் கிடையில் இந்திய முஸ்லிம்களென்றும் இலங்கை முஸ்லிம்களென்றும் பாகுபாட்டை உண்டு பண்ணி மித்திர பேதம் செய்ய சில சிங்கள ராஜதந்திரிகள் முயன்றார்கள். அவர்களுடைய முயற்சி ஆரம்பத்தில் ஓரளவு பலன் அளித்த தென்றாலும் இப்பொழுது இலங்கை முஸ்லிம் சமூகம் விழிப்படைந்து விட்டது. முஸ்லிம்கள் தங்களிடையே பிளவு ஏற்பட அனுமதிப்பது அபாயகரமானதென்று உணர்ந்து சிங்களவர்களின் மித்திர பேதப் பிரசாரங்களுக்கு இடமில்லாதபடி செய்து விட்டார்கள். இந்த ஏமாற்றத்துக்கு அடுத்தபடியாக வட இந்தியர்களையும் தென் இந்தியர்களையும் மோத விடுவதற்குச் சதிகள் நடைபெறுகின்றன.

இது ஒரு புறமிருக்க, இலாகா இல்லாத மந்திரி ஸ்ரீ ஏ. இ. குணசிங்கா தெருவுக்குத் தெரு பொதுக்கூட்டங்களை நடத்தி இந்தியர் மீது துவேஷப் பிரசாரம் செய்து கொண்டிருப்பதைப் பார்த்தால் தென்னுப்பிரிக்காவில் நடந்ததைப் போன்ற கலகம் இலங்கையிலும் ஏற்படுமோ என்று சிலர் அஞ்சுகிறார்கள். இதைப் பற்றி செனேட் சபையிலும் டாக்டர் இ. எம். வி. நாகநாதன் என்ற தமிழ் அங்கத்தினர் ஒரு கேள்வி கேட்டார். இந்தியர் பிரஜா உரிமை மசோதாவின் அக்கிரமமான ஷரத்துக்களை எதிர்த்து வோட்டுப் போட்ட அங்கத்தினர்களைக் கண்டிப்பதற்காக ஸ்ரீ குணசிங்கா பல கூட்டங்கள் நடத்திப் பேசி வருவதால் சிங்களவர்கள் இந்தியர்களிடமும் அவர்களை ஆதரிப்பவர்களிடமும் மிகுந்த ஆத்திரம் கொண்டிருக்கிறார்கள். இம்மாதிரி நிலைமையில் பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்குப் போதிய போலீஸ் பாதுகாப்பு அளிக்க முடியுமா என்று செனேட்டர் நாகநாதன் கேட்டபொழுது, ஸ்ரீ குணசிங்காவின் கூட்டங்களைப் பற்றித் தமக்கு உத்தியோக தோரணையில் தகவல் இல்லையென்று சொல்லிச் சபைத் தலைவர் மழுப்பிவிட்டார்.

## கூட்டுப் பிரார்த்தனை இயக்கம்

பல ஆயிரம் வருடப் பழமை வாய்ந்த திருக்கேதீஸ்வரத்தில் இந்துக்கள் ஒரு புதிய மடம் கட்டி ஞானசம்பந்தர் மடம் என்ற பெயருடன் அதைச் சென்ற தை அமாவாசை புண்ணிய தினத்தன்று திறந்து வைத்திருக்கிறார்கள். சைவபக்தர் ஸ்ரீ சுந்தரம் தலைமையிலே கொழும்பு ஜிந்துப்பட்டிக் கோவிலில் நடக்கும் வாராந்தரக் கூட்டுப் பிரார்த்தனை இப்பொழுது தேசமெங்கும் பரவிய ஒரு பெரிய இயக்கமாகி விட்டது. இந்தப் பிரார்த்தனை நடக்கும் ஷண்முகவிலாச மண்டபத் திருப்பணிக்காக ஒரு சினிமாக் காட்சியும் நடைபெற்றது. சைவ அபிமானிகள் ஆயிரக் கணக்கில் பண வசூல் செய்து கொடுத்தார்கள்.

# ஓடும் வண்டியில்....

மாணவன்

"முதல் மெயிலில் கூட்டம் இருக்குமா, இரண்டாவது மெயிலில் கூட்டம் இருக்குமா, ஸார்?" என்று ஒருவர் என்னைச் சீண்டிக் கேட்டார்.

"எந்த வண்டியில் இடம் கிடைக்கின்றதோ, அதில் ஏறிக் கொண்டால் போச்சு!" என்று சாரமில்லாத தொனியில் நான் பதில் சொன்னேன்.

ரயில் வந்ததும் அவர் என்னை மேலும் கீழுமாய்ப் பார்த்தார். நான் அசையாமல் இருந்ததைக் கண்டு அவருக்கு ஆச்சரியம் ஒருபுறம்; இடம் கிடைக்குமோ என்ற பிரச்னையில் அவசரம் மற்றொரு புறம். ஜனங்கள் கூட்டம் கூட்டமாய் ஒவ்வொரு பெட்டியையும் தாக்கினர். என் அருகில் இருந்த மனிதரும் அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டார். வண்டியிலிருந்து இறங்க வழி இல்லாமல் அந்தந்தப் பெட்டியில் உள்ளவர்கள் தவித்தனர்.

இதற்கிடையில் ஒரு மனிதன், "மூன்றாவது பெட்டி காலியாயிருக்கிறது; அங்கே போங்கள்!" என்று சொல்லிக்கொண்டே ஓடிவந்தான். உடனே அந்தப் பெட்டியின் முன்னால் நின்ற கூட்டம் கலைந்தது; அவர்கள் எல்லோரும் ஓட்டமாய் ஓடி மூன்றாவது பெட்டியை முற்றுகை யிட்டனர். அவர்கள் அப்பால் சென்றதும், வந்த மனிதன் இந்தப் பெட்டியில் ஏறினான். எனக்கு வியப்பா யிருந்தது. அவன் செய்தது ஒரு சூழ்ச்சி! நானும் அதே பெட்டியில் ஏறிக் கொண்டேன்.

இங்கே கூட்டம் அதிகமாய்த்தான் இருந்தது. ஏழு எட்டு பேர் நின்று கொண்டிருந்தனர்; அவர்களில் நானும் ஒருவன். சிலர் உட்கார்ந்திருந்தனர்; சிலர் மேல் பலகையில் படுத்திருந்தனர். ஒருவர் என்னை உட்காரச் சொல்லி மேல் பலகையில் தான் விரித்து வைத்திருந்த படுக்கைக்குச் சென்றார். வண்டி கூக்குரலுடன் மெல்ல நகர்ந்தது. என் பக்கத்தில் முதலில் நின்று கொண்டிருந்த மனிதர் இடம் கிடைக்காமல் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தார். அவர் என்னைப் பார்த்தும், பார்க்காதவர் போலத் தன்னுடைய முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார்.

பெட்டியில் இடத்திற்காக ஒருவருக்கொருவர் சண்டையிட்டுப் பேசினர். அவர்களில் ஒருவர் சாத்வீகத்துடன் நியாயம் தீர்க்க முன் வந்தார். அவர் வலது கையில் ஒரு கறுப்புத் தொப்பி இருந்தது. "அமைதி, அமைதி!" என்று அவர் தன் இரண்டு கைகளையும் உயர்த்தினார். படுத்திருந்த ஒரு பிரயாணியின் நாய் 'லொள், லொள்' என்று குரைக்க ஆரம்பித்தது. அதை அடக்குவதற்குள், ஒரு குழந்தை அழத் தொடங்கியது. அந்தக் குழந்தையின் தாயார் அதற்குப் பால் ஊட்டினாள்; கிலுகிலுப்பை ஆட்டினாள். ஆனால் குழந்தையின் அழுகை ஓயவில்லை. கடைசியாக அவன் ஆராரோப் பாட்டுப் பாடினான்; குழந்தை அப்பாட்டில் லயித்துத் தூங்கியது. வண்டியில் அமைதி நிலவியது; பாட்டு மாத்திரம் கம்பீரமாய் ஒலித்துக் கொண்டிருந்தது. அவன் மேலும் மேலும் சினிமாப் பாட்டுக்களைப் பாடிக் கொண்டே யிருந்தான். நாங்கள் எல்லோரும் ஸ்தம்பித்து ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டோம். சற்று நேரத்திற்கெல்லாம் அவன் தன் இடத்தை விட்டு எழுந்து வந்து ஒவ்வொருவரிடமும் கையை நீட்டினான்.

அடுத்த ஸ்டேஷனில் வண்டி நின்றது; அந்தப் பிச்சைக்காரி இறங்கிவிட்டான்.

ஒரு செட்டியார் ஒரு பெட்டியில் ஏறினார். அவருடன் நான்கு பேர் வந்தனர். எல்லோரும் சேர்ந்து அவருடைய படுக்கை, பெட்டி முதலியவைகளை வண்டியில் இடம் பார்த்து அடுக்கிவிட்டுக் கீழே இறங்கினர். கார்டு 'விசில்' ஊதினார்; வண்டி நகர்ந்தது. "அடே ராமு! நான் சொன்னதெல்லாம் கவனம் இருக்கிறதா?" என்றார் செட்டியார். "தம்பி, மாணிக்கம்! ராமு அதையெல்லாம் செய்கிறானா வென்று பார்த்துக் கொள். அடே முருகா! காந்தா! அவரைச் செடி, மாடு எல்லாம் ஜாக்கிரதை! வேளா வேளைக்குப் பார்த்துக் கொள். நான் இரண்டு நாட்களில் திரும்பி வருகிறேன்!" என்று தொடர்ந்து செட்டியார் சொன்னார். ரயில் கூவியது. "குழந்தைகளைப் பார்த்துக்......கோ!" என்றார் செட்டியார். இது ரயில் கூவியதைக் கேலி செய்வதுபோல் இருந்தது.

டிக்கெட் செக்கிங் அதிகாரி பக்கத்துப் பெட்டியிலிருந்து வந்தார்; செட்டியாரிடம் பிளாட்பாரம் டிக்கெட்தான் இருந்தது. "அந்தப் பயல்கள் 'டிக்கெட்டை என்னிடம் மாற்றிக் கொடுத்து'விட்டார்களே!" என்று கர்ஜித்தார். "ஏன் ஐயா, இப்படிச் சத்தம் போடுகிறீர்? இப்பொழுது என்ன நடந்து விட்டது? சரி, பணத்தை எடு; நான் ரசீது தருகிறேன்" என்றார் அதிகாரி. வேறு வழி இல்லாமல் செட்டியார் 'இரட்டை சார்ஜ்' கொடுத்தார்.

பிளாட்பாரத்தில், 'போண்டா—முறுக்—மசால் வடை,' 'சோடா—கலர்,' 'கமலா—ஆரஞ்,' 'காபி—டீ,' 'பீடா—பீடி—சிகரெட்,' 'வாழைப்பழம்—வாழைப்பழம்' என்ற இரைச்சல்கள் காதில் அறைவதுபோல் இடைவிடாமல் ஒலித்துக் கொண்டிருந்தன. என் பெட்டியில் இவற்றுக்கு அதிகமாகக் கிராக்கி இல்லை. ஒருவர் மாத்திரம் 'போண்டா—முறுக்—மசால் வடை' ரகத்தில் ஒன்று வீதம் வாங்கிச் சாப்பிட்டார்; பிறகு டீ அருந்தினார்.

அநியாயமாய்ச் செட்டியார் 'இரட்டை சார்ஜ்' கொடுத்தாரே என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டிருந்தார்கள். "இந்த விஷயங்களில் ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும்" என்றார் செட்டியாருக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்த ஓர் ஆசாமி.

"டிக்கெட்டின் நம்பரை ஒரு டைரியில் குறித்துக் கொள்ள வேண்டும். டிக்கெட் தொலைந்தாலும் பரவாயில்லை; அந்த நம்பர் உபயோகப்படும்" என்று தொடர்ந்து சொல்லிக் கொண்டே, தன் கையைச் சட்டைப்பையில் விட்டுத் துளாவிய ஒருவர், "அட! டைரி இருக்கிறது; மணிபர்ஸைக் காணோமே!" என்று அலறினார்!

"எவ்வளவு ரூபாய் வைத்திருந்தீர்கள்?" என்றுசெட்டியார்பரிதாபத்துடன் கேட்டார்

"அதிகம் ஒன்றுமில்லை......" என்று மழுப்பினார் ஆசாமி.

இரவு சுமார் மூன்று மணி இருக்கும். வண்டி வெகு வேகமாய்ச் சென்று கொண்டிருந்தது. குளிர்க் காற்று தாங்காமல் பிரயாணிகள் ஜன்னல் கதவுகளை மூடினர். சிலர் போர்வைகளை எடுத்துப் போர்த்திக் கொண்டனர்; சிலர் டவல்களையும் சவுக்கங்களையும் எடுத்துக் காதை மூடிக் கட்டிக் கொண்டனர்; சிலர் பக்கத்தில் அமர்ந்திருந்தவர்களின் மேல் தலையைச் சாய்த்தனர்; சிலர் கால்களை எதிர் 'ஸீட்'டில் நீட்டிக் கொண்டனர்.

'போண்டா—முறுக்—மசால்'வடை' சாப்பிட்ட ஆசாமி வாந்தி எடுத்தார். ஒரே துர்நாற்றம் சூழ்ந்தது; எல்லோருக்கும் தலையைச் சுற்றியது; குடலை முறுக்கியது. அந்த ஆசாமிக்குக் காது அடைத்துக் கொண்டது. யாரிடமும் தண்ணீர் கூஜாவுமில்லை; தண்ணீரும் இல்லை. அறையில் உள்ள குழாயிலும் தண்ணீர் வரவில்லை. இடையில் ஒரு ஸ்டேஷனும் வந்தபாடில்லை. வண்டியை நிறுத்த யாருக்கும் தைரியமில்லை. ஐம்பது ரூபாய் அல்லவா அபராதம் கொடுக்க வேண்டும்?

ஜன்னல்கள் எல்லாம் திறந்து வைக்கப் பட்டன; ஆயினும் துர்நாற்றம் குறைய வில்லை. அந்த ஆசாமியின் பக்கத்தில் உட்கார்ந்திருந்த அத்தனை பேரும் வண்டியின் ஒரு மூலையில் ஒதுங்கிக்கொண்டனர். அவர்களில் ஒருவர், "எவ்வளவு ஜாக்கிரதையாக ரயில் பிரயாணம் செய்யவேண்டியிருக்கிறது!" என்று சொன்னார்.

சந்தேகம் என்ன?





"பாட்டி! குழாயிலே தண்ணி வரலே என்று ஓயாமல் புகார் செய்கிறயே! எப்படி வரும்? சுதேசிக் கண்காட்சியில் செட்டப்பில் ஏரியைப் பார்த்தேன். நம்ம வீட்டு அண்டா பெரிசு தான் இருக்கு! அதிலேயிருந்து இவ்வளவு தண்ணியாவது வருகிறதே!"

# வீரப் புதல்வர்கள் பாரீர்!

(நமது நிருபர்)

பத்திரிகை நிருபர்: "இந்திய விமானப் டையிலுள்ள விமானிகளின் சம்பளத்துக் ம் சிவில் இந்திய விமானிகளின் சம்பளத் க்கும் வித்தியாசம் உண்டா?"

விமானப் படை அதிகாரி: "உண்டு, வில் விமானிகளுக்கு அதிகச் சம்பளம் டைக்கிறது."

"அப்படியானால் விமானப்படையிலுள்ள வரும் சிவில் விமானிகளாகச் செல்ல ரும்பவில்லையா?"

"இல்லை. அதிகச் சம்பளத்துக்காக சைப்பட்டுச் சென்ற ஒரிருவர் தாங்கள் வ்வாறு செய்தது பெரும் தவறு என்பதை ர்ந்து மீண்டும் விமானப் படைக்குத் ரும்பி வர விரும்புகிறார்கள். ஆனால், ங்கள் அவர்களை மறுபடியும் எடுத்துக் ள்ள மறுத்து விட்டோம்."

"அதிகச் சம்பளம் கிடைக்கும் இடத்தை டுவது மனித சுபாவம் அல்லவா?"

"அது எப்படியோ? ஆயிரக் கணக்கில் ம்பளம் தருவதாகக் கூறி எங்களில் சில யும் சிவில் விமானக் ம்பெனியார் அழைத்த ர். ஆனால், நாங்கள் தற்கு இணங்கவில்லை. சத்துக்காக உயிரை டத் துணிந்து இங்கு ந்துள்ள நாங்கள் திகச் சம்பளத்துக்கு சைப்படுவது எவ்வாறு பொருந்தும்?"

பெங்களூரிலுள்ள ராயல் இந்திய விமானப் டை நிலையத்தில் ஒரு த்திரிகை நிருபருக்கும் திரா விமானப் படை திகாரி ஒருவருக்கும் ல தினங்களுக்கு முன் டந்த சம்பாஷணை யையே மேலே குறிப் பிட்டிருக்கிறேன்.

சுதந்திர இந்தியாவிலுள்ள சைன்யத்தின் தலைவர்கள் இப்போது இரண்டு முக்கிய காரியங்களில் முழு கவனத்தையும் செலுத்த முற்பட்டிருக்கிறார்கள்.

1. பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்தில் இந்திய இராணுவத்தினருக்கும் பொது ஜனங்களுக்கும் இடையே இருந்த பிளவை அகற்றி, இரு சாராருக்கும் நெருங்கிய தொடர்பையும் ஐக்கிய பாவத்தையும் ஏற்படுத்த முனைந்திருக்கிறார்கள்.

2. எந்த நிமிஷத்திலும் எந்தத் திசையிலிருந்து அபாயம் வந்தாலும் சுதந்திர இந்தியா அதைத் தடுத்து விரட்டுவதற்கு ஆயத்தமாயிருப்பதற்குத் தகுதியாக இந்தியாவின் சைன்யத்தை இணையற்ற வீரமும் தீரமும் நவீன யுத்த சாதனங்களும் உடையதாகச் செய்ய உறுதி கொண்டிருக்கிறார்கள்.

அதற்கிணங்க சுதந்திர இந்திய ஆகாயப் படையையும், கடற்படையையும், தரைப் படையையும் பெருக்கும் அலுவல்கள் துரிதமாக நடைபெற்று வருகின்றன. அதே சமயத்தில், பொது ஜனங்களின் ஒத்துழைப்பையும் அவர்களுடன் நெருங்கிய



ஆகாசப் படை வீரர்களுக்கு வன யுத்தப் பயிற்சி



போர் விமான ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள இந்திய வீரர்கள்

தொடர்பையும் நாடும் முயற்சியில் இராணுவத்திலுள்ள பொதுஜனத் தொடர்பு அதிகாரிகள் ஈடுபட்டிருக்கிறார்கள்.

• • •

அதையொட்டி, இந்திய விமானப் படையைச் சேர்ந்த லெப்டினண்ட் எம். எஸ். பஞ்சநாதன் அவர்களின் அழைப்புக் கிணங்கப் பெங்களூருக்குச் சென்றிருந்தேன். மற்றும் சில பத்திரிகைகளின் பிரதிநிதிகளும் வந்திருந்தார்கள்.

அங்குள்ள இராணுவப் பயிற்சி ஸ்தாபனங்களைப் பார்வையிட்டபோது, இந்திய இராணுவ அதிகாரிகளின் தேசபக்தியும், நமது இராணுவம் மிகவும் வலிமை பொருந்தியதாக இருக்க வேண்டும் என்பதில் அவர்களுக்குள்ள ஊக்கமும், தங்களுக்கும் பொது ஜனங்களுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுவதில் அவர்களுக்கு இருக்கும் ஆர்வமும் நன்கு தெரிந்தன.

ஏற்கெனவே அரக்கோணத்திலிருந்த ராயல் இந்திய விமானப் பயிற்சிசாலை, பெங்களூரை அடுத்த ஜாலஹள்ளி என்ற இடத்துக்குச் சென்ற வருஷத்தில் மாற்றப்பட்டது. அதில் தற்போது 1600 இளைஞர்களுக்கு மேல் பயிற்சி பெற்று வருகிறார்கள். உடை, உணவு முதலிய சகல வசதிகளும் அவர்களுக்கு இலவசமாக அளிக்கப்படுகின்றன. ஆரம்பப் பயிற்சி பெறும் அவர்களை, அவரவருடைய திறமைக்குத் தகுந்தவாறு இருபிரிவுகளாகப் பிரித்து மேற் கொண்ட பயிற்சிக்கு அனுப்புவார்கள்.

மற்ற தேசங்களிலுள்ள விமானப் படைகளுடன் ஒப்பிடும்போது, இந்திய விமானப் படை மிகச் சிறியது. எனவே, இந்திய விமானப்படை வலிமையுள்ள முதல்தரப் படையாக விளங்க வேண்டுமாயின், பதினாயிரக் கணக்கான இளைஞர்கள் விமானிகளாகப் பயிற்சி பெற முன் வர வேண்டும். இந்தியாவின் சுதந்திரத்தைப் பாதுகாக்கும் மகத்தான, புனிதமான கடமையை நிறைவேற்றும் பெருமையை அவர்கள் அடைய வேண்டும். விமானிகளைத் தவிர, தொழில் நிபுணர்கள், குமாஸ்தாக்கள், டிரைவர்கள், அகௌண்டென்டுகள், கல்வி போதகர்கள் காண்டீன் உதவியாளர்கள் முதலியோரும் ஏராளமாகத் தேவைப்படுகிறார்கள்.

விமானப் படை உயர்தர அதிகாரி ஏர் கமோடர் ஆர். எச். டி. சிங் மேற்படி விவரங்களையெல்லாம் எடுத்துக் கூறினார். விமானப் படையில் குறிப்பிட்ட ஒருவருக்கு எத்தனை வருஷ காலம் அனுபவம் இருக்கிறது என்பதைக் கொண்டு உயர்ந்த பதவி அளிக்கப்படுவதில்லை என்றும், மிகவும் திறமைசாலியாக இருப்போர் அதி சீக்கிரத்தில் உயர்ந்த பதவிக்கு வரச் சந்தர்ப்பம் இருக்கிறது என்பதையும் அவர் குறிப்பிட்டார்.

பிறகு விமானிகள் பயிற்சி பெறுவதையும், ராயல் இந்திய இராணுவக் கல்லூரியையும் பார்வையிட்டோம்.

பெங்களூரைத் தவிர இது போன்ற கல்லூரிகள் ஜீலம், ஜலந்தர், ஆஜ்மீர், பெல்காம் முதலிய இடங்களிலும் இருக்கின்றன. ஜீலம் பாகிஸ்தானில் சேர்ந்து விட்டதால் இந்தியாவில் மொத்தம் நாலு கல்லூரிகள் இருக்கின்றன. இந்திய சிப்பாய்கள், ஜே. ஸி. ஓ.க்கள் முதலியோரின் புதல்வர்களுக்கு இலவசமாக இராணுவக் கல்வி அளிப்பதே அவைகளின் நோக்கமாகும். அதில் கல்வி கற்றவர்கள் இராணுவ அதி-

சரியாக வர முடியாவிடில் சிப்பாயாகலாம். சிப்பாயாகவும் வர முடியாதவர்கள் வேறு துறையில் உத்தியோகங்களை நாடிச் செல்லலாம்.

சில மாதங்களுக்கு முன் பெங்களூரில் பெரும் புயல்காற்று அடித்தது. ஏராளமான மரங்கள் வேருடன் சாய்ந்து விட்டன. ரஸ்தாவில் மலைபோல் குறுக்காக விழுந்து கிடந்த ஒரு பிரம்மாண்டமான மரத்தை மாத்திரம் யாராலும் அப்புறப்படுத்த முடியவில்லை. பொது ஜனங்கள் எவ்வளவோ முயன்று பார்த்தார்கள். போலீசாரும் முண்டிப் பார்த்தார்கள். நாட்கள் கடந்தன. அந்த மரத்தை மாத்திரம் அசைக்க முடியவில்லை. "இந்த மரத்தை அகற்ற இன்னும் எத்தனை நாட்கள் செல்லுமோ?" என்று பொது ஜனங்களும் அதிகாரிகளும் திகைத்துக் கொண்டிருக்கையில், அந்த இடத்துக்கு ஒரு கோஷ்டியினர் வந்தார்கள். ஏதோ ஒரு சிறிய சாமானை அப்பால் எடுத்து வைப்பது போல், மேற்படி மரத்தை அப்புறப்படுத்தி விட்டார்கள். அந்தக் கோஷ்டியினர் யார் என்று நினைக்கிறீர்கள்? அவர்கள்தான் நமது இராணுவத்தின் உயிர் நாடியான முன்னணி வீரர்கள்!

சென்ற மகா யுத்தத்தின் போது இத்தாலியப் போர் முனையில் உடல் சிலிர்க்கும் சம்பவம் ஒன்று நடந்தது. ஒரு சுரங்கம் வெடிக்கும் தறுவாயிலிருந்தது. சுபேதார் சுப்பிரமணியம் என்ற வீரர் அதைப் பார்த்து விட்டார். அருகிலிருந்த ஏராளமான சிப்பாய்களை எச்சரிக்க நேரமில்லை. ஒரு நொடி தாமதித்தாலும் மகத்தான ஆபத்து நேர்ந்து விடும் என்பதை உணர்ந்து, அவர் ஓடிச்சென்று பாய்ந்து அந்தச் சுரங்கத்தின் வாயில் படுத்துக் கொண்டார். சுரங்கம் வெடித்ததில் அவர் மாத்திரம் பலியானார். மற்றவர்கள் உயிர் தப்பினர். தமது உயிரைத் தியாகம் செய்து மற்றவர்களைக் காப்பாற்றிய சுபேதார் சுப்பிரமணியத்தின் பெயர் இராணுவ முகாமில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருக்கிறது.

1780-ம் வருஷம் உருவான இந்த முன்னணி வீரர்களின் படை வாழையடி வாழையாக வளர்ந்து உலகத்திலே இணையற்ற ஒரு படையாக விளங்குகிறது.

அதிலுள்ள எல்லோரும் தென்னிந்தியாவைச் சேர்ந்தவர்கள். அந்தப் படையிலும், பயிற்சி முகாமிலும் தமிழர்கள்தான் மிகவும் அதிகமாக இருக்கிறார்கள். "மதராஸ் ஸாப்பர்ஸ் அண்ட் மைனர்ஸ்" என்று அழைக்கப்பட்டு வந்த அந்தப் படையின் பெயரை இப்போது ராயல் இந்திய இன்ஜினீர் படை என்று மாற்றியிருக்கிறார்கள்.

அவர்கள் அனாயாசமாக மலைகளைக் குடைந்து செல்லுவார்கள். உறைந்து கிடக்கும் பனிமலைகளைப் பிளந்து வழி செய்வார்கள். இரத்த ஓட்டத்தை நிறுத்தும் ஹிமயமலைக் குளிரையோ, மண்டையைத் தாக்கும் சஹாரா பாலைவன உஷ்ணத்தையோ லட்சியம் செய்ய மாட்டார்கள். காடு, மேடு, வெள்ளம் முதலிய எவ்வித இடையூறுகளையும் சட்டை செய்யாமல் முன்னேறுவார்கள்.

போர் முனையில் செடிகளைத் தொட்டால் சுரங்கங்கள் வெடிக்கும். மரங்களைத் தொட்டால் வெடிக்கும். வழியெல்லாம் எதிரிகள் இரகசியமாகச் சுரங்க வெடிகளை வைத்திருப்பார்கள். அந்தச் சுரங்கங்களையெல்லாம் அகற்றும் பொறுப்பு இன்ஜினீர் படையையே சார்ந்தது.

இவர்களை அதிசய பிறவிகளென்றும் அசகாய சூரர்களென்றும் ஆங்கிலத் தளபதிகள் வர்ணித்திருக்கிறார்கள்.

சீனா, ஆப்கானிஸ்தானம், ஆப்பிரிக்கா, எகிப்து, பாரசீகம், அபிஸீனியா, எரிட்ரியா, சிரியா, இராக், இத்தாலி, கிரீஸ், இந்தோ சீனா, பர்மா, மலாயா முதலிய பல நாடுகளிலும் நடந்த போர்களில் அவர்கள் கலந்து கொண்டு கீர்த்தி பெற்றிருக்கிறார்கள்.

சமீபத்தில் நடந்த காஷ்மீரப் போரில் முதன் முதலாகக் காஷ்மீரத்துக்குள் நமது சைன்யம் பிரவேசிப்பதற்கு வழி செப்பனிட்டு உதவியவர்கள் இந்திய இன்ஜினீர் படையைச் சேர்ந்த தென்னிந்திய வீரர்களே.

போர் முனையில் மாண்ட அல்லது முடமான இன்ஜினீர் படையினரின் புதல்வர்களுக்கு இலவசமாகக் கல்வியளித்துப் பராமரித்து வருவதுடன், இராணுவ அதிகாரிகளின் புதல்வர்களுக்கும் இலவசமாகக் கல்வியும் இராணுவப் பயிற்சியும் அளிக்கத் தகுந்த ஸ்தாபனங்கள் இருக்கின்றன.

இராணுவத்தைச் சேர்ந்தவர்கள் பரம்பரையாக இந்தியாவை விரோதிகளிடமிருந்து பாதுகாக்கும் வீரப் புதல்வர்களாக விளங்கி வரவேண்டும் என்பதே மேற்படி முறைகளின் நோக்கமாகும்.

கண்ணினுமினிய நமது சுதந்திரத்தைப் பாதுகாக்கும் இந்திய இராணுவத்துக்குப் பொது ஜனங்கள் சகல விதத்திலும் ஆதரவு அளிக்க வேண்டும். இந்திய சைன்யத்தில் ஏதாவது ஒரு பகுதியில் சேர்ந்து தொண்டு செய்வதற்கு நம்முடைய வாலிபர்கள் மேலும் மேலும் முன்வர வேண்டும்.

# மாடசாமி



வி. மு.

மாடசாமியின் கண்கள் ஆவேசம் கொண்டது போல் நாலாபுறமும் சுழன்றுகொண்டிருந்தன. அவனது மூளையும் அந்த ஒரு க்ஷணத்திற்குள் ஆயிரம் மைல் வேகத்தில் இயங்கிக் கொண்டிருந்தது. அரையும் குறையுமான அந்தியின் வெளிச்சத்தில் அந்த மூன்று வயதுக் குழந்தை தன் புரியாத பாஷையில் 'ஊ ஊ' என்று ஏதோ பேசிக் கொண்டிருந்தது. கோயில் பிராகாரத்தின் சித்திரங்களிலும், சிலைகளிலும் மயங்கி விட்டதோ என்னவோ! தன்னைச் சேர்ந்தவர்கள் அங்கு யாருமில்லை என்பதைக்கூட அது இலட்சியம் செய்யவில்லை.

அந்தக் குழந்தையின் உடம்பிலிருந்த நகைகளின் மதிப்பை எவ்வளவு குறைத்துப் போட்டும் நானூறு ரூபாய்க்கு வந்து நின்றது. நானூறு ரூபாய்! மாடசாமியைப் பொறுத்தவரை எவ்வளவு பெரிய தொகை! ஒரு கணம்தான் இந்தச் சிந்தனை, அடுத்த கணத்தில் அவனது கை கால்கள் பரபரப்படைந்து விட்டன. குழந்தையை வாரி யெடுத்துத் தன் கந்தைத் துணியில் மூடிக்கொண்டு கிளம்பினான். அவனுக்காகத் தானோ என்னவோ, தெற்குக் கோபுர வாசற் கதவும் ஒருகாளு மில்லாமல் திறந்திருந்தது.

மாடசாமி ஐந்தாறு தெருக்களையும், சந்துகளையும் கடந்து துர்நாற்றம் வீசும் தன் மாளிகைக்குள் பிரவேசித்தபோது குழந்தை நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தது. பாயைப் பிரித்துப் போட்டுக் குழந்தையை அதில் கிடத்தினான். பின்னர், மூலையிலிருந்த அகல் விளக்கை ஏற்றி வைத்து விட்டு ஒரு சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு சற்று உலாவ ஆரம்பித்தான். மங்கிய ஒளியில் அந்த நகைகளின் பளபளப்பு அவனது கண்களை உறுத்திக் கொண்டிருந்தது!

மாடசாமி சுருட்டை அப்பால் எறிந்து விட்டுக் குழந்தையிடம் வந்து உட்கார்ந்து கொண்டான். அப்பொழுது தான் சாவதானமாக நகைகளுக்கு மதிப்புப் போடுவதற்கு அவனுடைய மூளை இடம் கொடுத்தது. ஒரு மூன்று வயதுக் குழந்தைக்கு நானூறு ரூபாய் நகையா!

குழந்தையின் கழுத்திலிருந்த சங்கிலியை ஆர்வத்துடன் கழற்றிக் கீழே வைத்தான் மாடசாமி. பின்னர், கை வளையல்களைக் கழற்றினான். அப்புறம்··· குழந்தை தூக்கத்தில் கொஞ்சம் அசைந்து கொடுத்தது! மீண்டும் எழுந்து உலாவ ஆரம்பித்தான். 'ஒருவேளை குழந்தை எழுந்து பெரிதாக அழ ஆரம்பித்து விட்டால்......?' இந்த நினைவு வந்த போது கொஞ்சம் பயமாகத்தானிருந்தது! இருந்தாலும், பாதகமில்லை ...... ஊருக்கு ஒதுப்புறமான அந்த மேலக் காவேரிப் பிராந்தியத்தில் என்னதான் நடக்கக்கூடாது?

அவனுக்கு ஏதோ கொஞ்சம் பச்சாத்தாபம் ஏற்பட்டது! தன் ஆயுளையே அற்பமாக மதித்து அவனுக்குச் சமர்ப்பணம் செய்யப் போகிற அந்தக் குழந்தைக்கு முதலில் வயிறு நிறைய ஆகாரம் கொடுத்துவிட வேண்டியது. பின்னர், சாவகாசமாக எல்லாவற்றையும் பங்கிடு செய்து கொள்ள வேண்டியது. அதற்குள் இருளும் நன்றாகச் சூழ்ந்துவிடும்; சுலபமாகவே. பக்கத்துப் பாழுங் கிணற்றண்டை அதைக் கொண்டு போய்த் தீர்த்துவிட வேண்டும் என்று மாடசாமி தீர்மானித்துக் கொண்டான்.

ஆகவே, எழுந்து குழந்தையின்மீது இன்னும் இரண்டு துணிகளை எடுத்துப் போர்த்தினான். விளக்கை எடுத்துக் குழந்தையின் சமீபமாக வைத்துவிட்டுக் கையில் தகரக் குவளையுடன் வெளியே கிளம்பினான்.

மாடசாமி போடும் திட்டங்கள் அதிகமாகத் தவறியதில்லை. இதுவும் அவனது அதிருஷ்டந்தானோ என்னவோ, கண்களை மூடியவண்ணமே பாலைக் குடித்தது அந்த

அற்பாயுசுக் குழந்தை! அதன் பின்னர், பாக்கி யிருந்த கைகளைக் கழற்றுவதில் அவனுக்கு அதிகச் சிரமம் ஏற்படவில்லை.

எல்லா மாயிற்று. குழந்தை இன்னமும் உறங்கிக் கொண்டுதா னிருந்தது. மாடசாமியின் கணக்குப்படி அந்தப் பதினெட்டு நாழிகையும் வந்து விட்டது. மெதுவாக அலுங்காமல் அதை எடுத்துக் கொண்டு கிணற்றின் சமீபமாக வந்தான்.

ஆகாயத்தில் ஏராளமான நட்சத்திரங்கள் பூத்திருந்தன. வானுயர வளர்ந்திருந்த மரங்களெல்லாம் உல்லாச ஆட்டம் ஆடிக் கொண்டிருந்தன.

'ஒருவேளை காலையில் அது மிதக் கால—' என்ற எண்ணம் வரவே, மாடசாமி 'சட்'டென்று கைத்துண்டை எடுத்து அதன் இடுப்பைச் சுற்றிக் கட்டினான். அதன் மற்றொரு தலைப்பில் பெரிய கருங்கல்லைக் கட்டுவதற்கும் அவன் தயங்கவில்லை. குழந்தையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு, அதிகச் சத்தமின்றிக் கிணற்றுக்குள் போடுவதற்காகக் குனிந்தான். அப்பொழுது எங்கிருந்தோ 'கிரீச்'' என்ற சத்தம் வந்தது!

சனியன்! கிழட்டு ஆந்தையின் காதலுக்கு இதுதானா சந்தர்ப்பம்?

இன்னொரு 'கிரீச்!' என்ற சத்தம் வந்தது. எங்கேயோ இருந்த அதன் காதலியும் வந்து விட்டது!

மறுபடியும் மாடசாமி குனிந்தான். கையிலிருந்த குழந்தை சாவதானமாகப் பெருமூச்செறிந்தது. அவனுக்கு நெஞ்சு படபட வென்று அடித்துக் கொண்டது.

பாழும் சிந்தனை இறந்த காலத்தை நோக்கி அவனை இழுத்துச் சென்றது

## 2

பதினைந்து வருஷத்துக்கு முன்னால் அவன் 'மாரிசாமி.' அப்பொழுது அவனது பத்தினியும், இதேபோல் இரண்டு மூன்று வயதில் ஒரு பெண் குழந்தையும்தான் அவனது உலகம். நாணயமும் கடமையும் கொண்ட உழைப்பாளியாகத்தா னிருந்தான் மாரிசாமி.

ஏதோ ஒரு கோயில் தேர் திருவிழா பார்க்கப் போயிருந்தாள் அவன் மனைவி. திரும்பி வந்ததும் காலராக் கண்டு இறந்தாள். அவள் இறந்த சில நாளைக்கெல்லாம் குழந்தையும் செத்துப் போயிற்று. அது முதலே மாரிசாமிக்கு இந்த உலகத்தின்மேல் வெறுப்பு ஏற்பட்டது. நாளடைவில் அவன் குணங்களும் மாறின.

முதன் முதலாகக் கடைத்தெருவின் கூட்டத்தில் தன் 'தொழிலை' அரங்கேற்றபடி செய்து கொண்டான். அதன் பின்னர் இந்தச் சுலபமான தொழில் அவனுக்குச் சௌகரியமாகவே இருந்தது! திடீரென்று ஒருநாள் அரசாங்கத்திற்கு அவன் மேல் ஆவல் ஏற்பட்டு ஆறுமாதச் சாப்பாடும் போட்டது. அவனது திருவுருவத்தையும் தஸ்தாவேஜுகள் பதிவு செய்து கொண்டன!

கொஞ்ச நாட்கள் சென்றதும் அவன் "மாடசாமி" யானான்! இருந்தாலும் அவனைப் பொறுத்த வரையில் பழைய 'மாரிசாமி'யாகவே தான் இருந்தான். 'ரங்கூனுக்குப் போனால் மூட்டை கட்டிக் கொண்டு வரலாம்' என்று அவனது சகாக்கள் கூறினார்கள். அதுபோலவே அங்கு சென்று அரசாங்கத்தின் கண்களில் மண்ணைத் தூவினான்! ஆனால், இரண்டே வருஷங்களில் அவன் வெறுங் கையுடனேயே கால் நடையாகத் திரும்பும்படி யாயிற்று. பாழும் போலீஸ்காரர்கள் சும்மா இருக்கிறார்களா? அவர்கள் இவனை ஏதோ 'ஒருமாதிரி' யாகப் பார்ப்பதை அவன் கொஞ்சமும் விரும்பவில்லை. மூன்று மாதம் வெகு பிரயாசைப்பட்டுச் சிவனடியார் வேஷம் கொண்டான். ஆனால், மாடசாமி—மாடசாமியே தான்!

இன்று சிந்தனை யுலகில் மாடசாமி 'பதினைந்து வருஷங்களையும்' முடித்துக் கொண்டு கைப்பனுவை — குழந்தையை நோக்கினான். அது கனவில் எதைக் கண்டதோ என்னவோ, இலேசாகச் சிரித்தது. அதனுடைய புன்சிரிப்பு அந்த நட்சத்திர வொளியில் அவனது



"பிள்ளைவாள்! சௌக்யந்தானே? உலகம் எப்படி இருக்கிறது?"
"தெரியாது, நாயுடுகாரு! கொஞ்ச நாளாக நான் ஊரில் இல்லே!"

இதயத்தின் மூடியை விசாலமாகத் திறந்தது. பரபரப்புடன் அதன் இடுப்பிலிருந்த துணி முடிச்சை அவிழ்த்து விட்டு அந்தக் கருங்கல்லை மாத்திரம் விற்றுக் தலைவர்களுக்கு அனுப்பி வைக்கான்!

3

இரண்டு வாரமாயிற்று. மூன்று வாரங்களுமாகி விட்டன. மாடசாமிக்கே ஒரு பாசம் ஏற்பட்டு விட்டது. அந்தக் குழந்தையிடம். இதைவிட ஆச்சரியம். அவனது தாடியின்மேல் அதற்கேற்பட்ட ஆசைதான்!

ஒரு நாள் குழந்தையை மெதுவாகத் தூங்க வைத்து விட்டுக் கடைத் தெருப் பக்கம் கிளம்பினான் மாடசாமி. ஏதேதோ அவனுக்குத் தோன்றியதெல்லாம் வாங்கிக்கொண்டு ஒரு கொடியில் திரும்பினான். குழந்தை அப்பொழுதும் அந்த நாற்றம் பிடித்த துணியில் உறங்கிக் கொண்டிருந்தது. அதன் சமீபமாக உட்கார்ந்து கொண்டு சிந்தனையைத் தட்டி விட்டான்.

“குழந்தை யாருடையதோ! அது இருக்குமிடத்தில் இருந்தால் எப்படியெல்லாமிருக்குமோ!” என்று எண்ணினான். அவனுக்குத் தன் மீதே ஒரு வெறுப்பு, பயம் எல்லாம் சூழ்ந்து கொண்டன. கொடியின் மீது அந்தக் குழந்தையின் பச்சை சில்க் சட்டை கேட்பாரின்றிக் கிடந்தது. அவன் ஏதோ யோசித்துக் கொண்டே பரபரப்புடன் எழுந்தான். அந்தச் சட்டையையெடுத்து அதற்கு அணிவித்தான். மிச்சமிருந்த சங்கிலியையும் காப்பையும் எடுத்துப் பூட்டினான். தோளின்மீது சார்த்திக் கொண்டு வெளியில் கிளம்பினான்.

கடைத் தெருவின் அழகையும், கூட்டத்தையும் பார்த்தபோது குழந்தைக்கு ஒன்றுமே புரியவில்லை.

ஒரு ஓரத்தில் வளையல்காரன் ஒருவன் கடை விரித்திருந்தான். அவன் பரத்தியிருந்த சங்கு வளையல்களைப் பொருட்படுத்தாது மேலே சென்றான் மாடசாமி. ஆனால் குழந்தையோ அதைக் காட்டி ‘ஊ ஊ’ என்றது. மாடசாமி அவனிடம் பேரம் பேசி நான்கு வளையல்களை வாங்கி மடியில் வைத்துக் கொண்டான். அதை வளையல்காரன் போடுவதில் அவனுக்கென்னவோ திருப்தியில்லை!

தெய்வத்திற்குத்தான் எவ்வளவு கொடுமை? எவன் ஒருவன் தான் செய்த குற்றங்களை நினைத்து வருந்தி அதற்காகத் தன்னையே நொந்து கொள்ளுகிறானோ அவனுக்கு மன்னிப்பே கிடையாதா! அரை விநாடிக்குள் ஒரு சிறு நாடகம் நடந்தே தீர்ந்தது!

அந்தக் குழந்தையை இருபது தினங்களாகக் காப்பாற்றி வந்ததற்கான கைம்மாறைப் புலரிடமிருந்தும் பெற்றுக் கொண்டான் மாடசாமி.

இனிமேல் தேகத்தில் அடி வாங்க வேண்டிய இடம் பாக்கியில்லை என்று சொல்லும்படி தட தட என்று அத்தனை அடிகள் விழுந்தன. தன் குழந்தை மேல் அதிக சிரத்தையுள்ள ஒரு பணக்கார ஸ்திரீ குழந்தையை வாங்கிக் கொண்டாள்.

“நட ஸ்டேஷனுக்கு” என்றான் ஒரு போலீஸ்காரன்.

‘திருட்டுப் பயலே — நீ மாரிசாமி தானேடா?” என்றான் இன்னொரு போலீஸ்காரன்.

அவன் பதில் சொன்னானோ, இல்லையோ! கோணல் மாணலாக அவன் கையில் குத்தியிருந்த ‘மாரி’ என்ற பச்சை எழுத்துக்கள் எப்படி மறைந்து விடும்? அன்றிரவே இருட்டறையில் சர்க்கார் விருந்தினன் ஆனான் மாடசாமி!

4

மாடசாமியின் விசாரணை முடிந்தது. அவனுக்கு இரண்டு வருஷக் கடுங் காவல் தண்டனை கிடைத்தது. ஆனால் அந்த யோகி இதையெல்லாம் லட்சியம் செய்தால்தானே? தீர்ப்புச் சொன்னதுதான் தாமதம்—கூட்டிலிருந்த புறா கிளம்புவது போல் எதிர்த் திசையை நோக்கிப் பாய்ந்தான். அடுத்த கணம் நீதி மன்றமே கலகலத்து விட்டது!

மாடசாமி அந்தப் பணக்கார ஸ்திரீயிடமிருந்த குழந்தையைப் பிடுங்கித் தழுவிக் கொண்டான். மடியிலிருந்ததை எடுத்து அதன் சிறு கைகளில் கொடுத்து விட்டுத் திரும்பினான்.

இதெல்லாம் ஒரு இமைப் பொழுதிற்குள் நடந்தேறி விட்டது! ஆயுளிலேயே முதன் முதலாக அவனது கண்கள் நீரைக் கொட்டின. அவன் தொண்டை படைக்கக் கூடிய வார்த்தைகள் கோர்ட்டின் சத்தத்தில் கலந்து விட்டன!

‘நாடகம் ஆடறியா, திருட்டுக் கழுதை! நடடா!” என்று கூறி ஒரு போலீஸ்காரன் மாடசாமியின் முதுகில் குத்து விட்டான். இந்த அடியையும் வாங்கிக் கொண்டு திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே நடந்தான் மாடசாமி.

சங்கு வளையல்களை வைத்துக்கொண்டே கைகளை நீட்டி ‘ஊ ஊ’ என்றது அந்தப் பெரிய மனுஷக் குழந்தை! பாசம் நிறைந்த பார்வையை வீசி விட்டு நடந்தான் அந்தத் திருட்டு மாடசாமி!



# கிரிக்கெட்காரர் கீல்வாதத்தினால் அவுட்டாக்கப்பட்டார்



**ஒரு முறை 'க்ருஷன்' சாப்பிட்டபின் மறுபடியும் தகுதி**

சாம்ஸனின் ஓட்டங்கள் கீல் வாதத்தினால் பாழடைந்தன. கூரிய வலி அவனுடைய கைகளையும் தசைகளையும் பிடித்தன. மட்டையைப் பிடிப்பது கூட பெரும் வேதனையாக இருந்தது. பந்தயத்தினின்று ஓய்வு எடுத்துக் கொண்டபோது தனது கிரிக்கெட் விளையாட்டே ஓர் முடிவெல்லைக்கு வந்து விட்டது என நினைத்தான். அவன் தலைவன் இவ யோசனைகள் சொன்னான்: தினமும் காலை உண்டிக்கு முன் 'க்ருஷனை'ப் பரிக்ஷியுங்கள்."

சாம்ஸன் அவ்வாறே செய்தான். மூன்று வாரங்களுக்குப் பின்னரே ஓர் வலுவுள்ள பந்தயத்தில் அறுபது ஓட்டங்கள் எடுத்துவிட முடிந்தது. அவனுடைய விளையாட்டு முன்னைவிட அதிக மேன்மையுடன் விளங்கிற்று — 'க்ருஷ'னுக்கு நன்றிகள். நீங்கள் கஷ்டப்படும் எவ்வித கீல் வாதமும் ஒரே ஒரு முக்கிய காரணத்தை கொண்டுள்ளது — மூத்திர நீர் கணுவிலும் தசையிலும் சேர்த்துக்கொண்டு விடுவதால். உங்கள் உடம்பினின்று மூத்திர நீரை வெளியேற்ற ஒரே ஒரு வழிதான் உளது — அதுதான் மூத்திரக் காய்களினின்று நீரை வெளியேறச் செய்வது. 'க்ருஷ'னுடைய ரகசியம் அது செய்யும் இரட்டை வேலையில் தான் உள்ளது. அது அங்கேயும் குடல்களிலும் ஒருங்கே வேலை செய்து நீர் தங்கும் இடங்களினின்று அவற்றை வெளியேற்றுவதுடன் மறுபடி அவ்விதம் சேரவிடாமலும் செய்கிறது. இன்றே க்ருஷன் வாங்குங்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும். விலை ரூ. 1/10 (மஞ்சள் பெட்டியில்.)

## நீங்கள் கூட அந்த க்ருஷன் உணர்ச்சியை அடையலாம்



# கம்பர் தரும் காட்சி

## 241. என்னை ஏன் விடவில்லை போருக்கு?

மனத் தளர்ச்சி ராவணனுக்கு உண்டாகி விடக் கூடாது என்று அவனைப் பார்த்து மகோதரன், "தேவர் மாத்திரமா? மூவருமே நமக்குத் தோற்று ஓடினவர்கள்தானே" என்று ஆவேசத்தோடு பேசினான்.

மேலும் சொல்லுகிறான்:

"உன்னைப் பற்றித்தான் பாடுகிறார்களே கவிஞர்கள்; — கைலயங்கிரியைச் சிவபெருமான் உடனேயே அஸ்தி வாரத்தோடு பெயர்த்துச் செந்தூக்காய்த் தூக்கிய வீரன் என்பதாகப் பாடுகிறார்களே!"

'வெள்ளியங் கிரியினை
விடையின் பாகனோ(டு)
அள்ளிவிண் தொடஎடுத்(து)
ஆர்த்த ஆற்றலாய்;
கள்ளியில் இருந்துறை
குரங்கின் தோள்வலிக்(கு)
எள்ளுதி போலும்நின்
புயத்தை,— எம்மொடும்.'

[வெள்ளியங் கிரியினை: கைலயங்கிரியை; விடையின் பாகனோடு: ரிஷபத்தை வாகனமாக உடைய சிவபெருமானோடு; பாகன்: வாகனத்தின் மீது செலுத்துபவன்; அள்ளி: அஸ்திவாரத்தோடு, மண்ணோடு மண்ணாய்ப் பெயர்த்து: விண்தொட எடுத்து ஆர்த்த ஆற்றலாய்: விண்ணையே தொடும்படியாகத் தூக்கி அட்டகாசம் செய்தாய் என்று புகழும் படியாகச் சக்தி வாய்ந்தவனே; கள்ளியில் இருந்துறை: உலர்ந்து ஒடியக்கூடிய சிறுமரக் குச்சியிலேயே இருந்து வாழும்; குரங்கின் தோள் வலிக்கு: அற்பக் குரங்கொன்றின் தோள் பலத்துக்கு எதிராக வைத்து: எள்ளுதி: இகழ அல்லவா செய்கிறாய்; நின் புயத்தை: உன்னுடைய தோள் வலியை]: எம்மொடும்: எங்களையும் சேர்த்துத்தான் இகழுகிறாய்.]

"ஏதோ கஷ்டம் இருக்கிறதாகச் சொல்லுகிறாய். இப்போது என்னைக் கொஞ்சம் விட்டுப் பார்."

'இடுக்கினி இயம்புவ(து)
என்னை? சண்டுஎனை
விடுக்குவை யாமெனிக்
குரங்கை வேரறுத்(து),
ஒடுக்கரும் மனிதரை
உயிருண்(டு), உன்பகை
முடிக்குவன் யான்'என
முடியக் கூறினான்.

[இடுக்கினி இயம்புவது என்னை: இந்தச் சந்தர்ப்பத்தில் ஏதோ இடைஞ்சல் இருக்கிறதாக எண்ணி அதை எடுத்துச் சொல்லுவது எந்த வகையில் பொருந்தும்; சண்டு எனை விடுக்குவை யாமெனில்: இப்போதே என்னைப் பகைவர் மேல் செல்ல அனுப்பினால் குரங்கை வேரறுத்து: குரங்கினத்தை இல்லையாக்கி; ஒடுக்கரும் மனிதரை: எதிர்த்து வெல்ல முடியாது என்று சொல்லுகிற அந்த மனிதரை; உயிர் உண்டு: கொன்று: உன் பகை முடிக்குவன் யான்: உன்னுடைய பகையைத் தீர்ப்பேன்; என முடியக் கூறினான் என்று சந்தேகத்துக்கு இடமில்லாமல் சொல்லித் தீர்த்தான்.]

• • •

மகோதரனைத் தொடர்ந்து வஜ்ரதந்தன் என்பவன் பேசுகிறான்:

"மனிதர்கள், குரங்குகள் என்று வந்திருக்கிறார்களே! அவர்களைத் தரையோடு தரையாய்த் தேய்க்க வேண்டும் என்று சொல்!"

'போயின மனிசரைக்,
குரங்கைப் பூமியில்த்
தேயுமின் கைகளால்,
இன்மின், என்றெமை

ஏயின பிறக்குவ
நன்றி, யென்னினி
ஆயுமி(து)! எம்வயின்
அயிர்ப்புண் டாங்கொலோ!'

[போயின மனிசரை: இங்கு வந்திருக்கிற மனித ஜன்மங்கள், அவர்களை, அவர்களோடு வந்திருக்கிற குரங்குக் கூட்டங்களை; பூமியில் தேயுமின் கைகளால்: தரையோடு தரையாய்க் கைகளால் தேய்த்து விடுங்கள்; நின்மின்: நின்று விடுங்கள்; என்றமை ஏயின பிறக்குவ நன்றி: என்று சொல்லி எங்களை ஏவிவிட்டுச் சும்மா இருப்பது அல்லாமல்; என்னினி ஆயுமிது: என் இனிமேலும் யோசனை பண்ணி மனதைப் புண்ணாக்கிக் கொள்ள வேண்டும்; எம்வயின் அயிர்ப்பு உண்டாங்கொலோ: எங்களிடத்தில் உனக்குச் சந்தேகம் ஏதேனும் தோன்றி விட்டதா?]

* * *

“உலகத்தில் எங்கே இருந்தால்தான் என்ன! உன் சொற்படி கேட்டு நடவாத பகைவர்களை, நிர்மூலம் செய்தேன். அந்த விதமாக உனக்கு அடிமைத் தொழில் புரிந்தவன் அல்லவா நான். அப்படி யிருக்கத் தவறின செயல் என்னிடம் ஏதேனும் உண்டென்று சொல்ல முடியுமா? இல்லையே!

'எவ்வுல கத்தும்நின்
ஏவல் கேட்கிலாத்
தெவ்வினை அறுத்(து)உனக்(கு)
அடிமை செய்தயான்;
தவ்வின பணியுள
தாகத் தான்கொலோ
இவ்வினை என்வயின்
சகலா' தென்றான்.

[தெவ்வினை அறுத்து: பகையை இல்லாமலாக்கி; தெவ்: பகை; உனக்கடிமை செய்தயான்: உனக்கு அடிமைத் தொழில் புரிந்த நான்; தவ்வின பணி: தவறின செயல்; உளதாகத் தான்கொலோ: உண்டென்று எண்ணித் தானோ; இவ்வினை என்வயின்: இந்தப் போர்த் தொழிலை; எனக்கு சகலா தென்றான்: என்னிடம் கொடாமல் இருப்பது என்று மனம் புழுங்கிச் சொன்னான்.]

போர் புரிவதற்கு இடமில்லையே என்று புழுங்குகிறது வஜ்ரதந்தனது உள்ளம். வீர தத்துவம் அப்படி யெல்லாம் ஆட்டுகிறது உள்ளத்தை.

## கிரிக்கெட் வாரத்தில்!









# வட்ட மேஜை

## பத்திரிகை தர்மம்

23-ம் 'கல்கி' இதழில் "பத்திரிகை தர்மம்" என்ற தலையங்கத்தில் தாங்கள் எழுதிய அத்தனையையும் வரவேற்கிறேன். நான் மாத்திரமல்ல தமிழ்நாட்டின் பெருமையையும், தன்மானத்தையும் கண்மணியாகப் போற்றும் ஒவ்வொருவரும் வரவேற்கிறார்கள்.

இந்தியாவிலே கண்ணியமாய் நடக்கும் பத்திரிகைகள் தமிழ் நாட்டில் இருந்துதான் வெளி வருகின்றன. லட்சக் கணக்கான மக்கள் தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் சிலவற்றை எப்போது வரும் என்று காலையில் ஆவலுடன் எதிர்பார்ப்பது எங்கள் நாட்டில் வழக்கமாகிவிட்டது. அந்தத் தகுதியில் தமிழர்கள் நிலை தவற மாட்டார்கள்.

தமிழ் நாட்டில் சிலகாலமாகப் பஞ்சடைந்த கண்களுடனும், ஒட்டி உலர்ந்த வயிறுடனும் வாழ வழியற்றவன் செய்யும் "லேகியங்கள்" போல் புதுமுறையில் பத்திரிகைகளையும் கதைகளையும் உற்பத்தி செய்ய முயன்றுள்ளனர். வாலிபர்களின் அகக் கண்களை அவிய வைப்பதே அவற்றின் உபயோகமாகி விட்டது.

நான் ஒரு வாலிபன்தான். சிலகாலமாக அப்படிப்பட்ட பத்திரிகைகள் இரண்டொன்றை வாங்கிக் கண்ணையும் மனத்தையும் செலவிட்டேன். போதாதற்குச் சென்ற வருடத்தின் இறுதி மாதங்களில் வெளிவந்த நாவல் ஒன்றையும் வாசித்தேன். நல்ல தமிழ்ச் சொற் கூட்டங்கள் அதில் நிறைந்திருந்தன. அந்த மயக்கத்தில் அப்புத்தகத்தில் கூறப்பட்ட வாதங்களும் சரிபோல் பட்டன. மனம் தடுமாறியது. கருத்துக்கள் தவறான பாதையை நோக்கிச் சென்றன.

இன்றைய இளைஞர்களிடம் வாதாடுவது முடியாது. எதையும் நிரூபிக்கத் தயாராயிருக்கிறார்கள். தாங்கள் கவனம் செலுத்தும் ஆபாசப் படங்களுக்கோ, கட்டுரை, கதை இவற்றுக்கோ தக்க நியாயம் காட்டுவார்கள். அவர்கள் "நான் அதை ஆபாசம் என்று பார்த்தாலும் அதன் வழி செல்லாமல் இருக்கப் புத்தியுண்டு" என்று தங்கள் தன்னம்பிக்கையையும் சொல்லிக் கொள்வார்கள். கெட்டதைப் பார்த்தால் நல்வழிக்கு மனம் திரும்புவது கஷ்டம். எனது அனுபவத்திலும் என் தமிழ்நாட்டு இனத் தோழர்களுக்கு இதைச் சொல்கிறேன்.

சில சினிமாப் பத்திரிகைகள் ஆபாசக் கட்டங்களைக் கண்டித்து எழுதும். ஆனால் அதே பத்திரிகை அட்டையிலோ இடை நடுவிலோ ஆபாச நிலையில் உள்ள பெண்களின் படங்களையே வெளியிடும். இந்த நிலையும் தமிழ்நாட்டில் மாறவேண்டும்.

யாழ்ப்பாணம்
25—1—49 சு. இராஜகோபாலன்

○●○

## கலை வீக்கம்

ஆபாசக் களஞ்சியங்களைக் கொண்டு அளவற்ற பணம் சம்பாதிப்பது என்னும் கொடிய நோய் நம் சினிமாக் கலையிலிருந்து பத்திரிகைகளுக்கும் தொற்றிக் கொண்டது போலும். மனதில் தோன்றியதை யெல்லாம் இறக்கித் தள்ளுவதே உயர்ந்த இலக்கியம் என்று துணிந்து கூறுகின்றனர். ஸ்திரீ-புருஷ சம்பந்தம் இயற்கையானது; அதற்கு மறைவும் வேண்டியதில்லை; கட்டுப்பாடும் வேண்டியதில்லை என்று பகிரங்கமாகக் கூறுகின்றனர். பகுத்தறிவற்ற மிருகங்களுக்கும் பகுத்தறிவுள்ள மனிதனுக்கும் வித்தியாசம் இருப்பதாகவே இவர்கள் கருதவில்லை. உண்மையைச் சொல்லப் போனால் போலிச் செல்வத்தை 'பண வீக்கம்' என்று குறிப்பிடுவது போல், நம் நாட்டின் தற்சமய வளர்ச்சியையும் 'கலை வீக்கம்' என்று குறிப்பிடுவதே பொருந்துமென்று வெட்கத்துடன் ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கிறது.

நம் நாட்டில் படித்தவர் மிகவும் குறைவு. படிப்பாளிகளிலும் பலர், 'படிக்காதவரே பரவாயில்லை' என்று கூறும்விதம் நம்முடைய பண்பாட்டை இகழ்கின்றனர்.

பத்திரிகைச் சுதந்திரம் பறிபோவதாகக் கூச்சலிடுவார்களோ என்று யோசிக்கக் காரணமில்லை. தனி ஒருவனின் குற்றத்தைப் பெரிதாக்கி இளைஞர்கள் உள்ளத்தில் துவேஷத்தையும் மிருக உணர்ச்சியையும் பரப்புவதை உடனே தொலைக்க வேண்டும். இல்லாவிடில் நம் சமுதாயமே அழிந்துவிடும். தனி மனிதனைக் கொலை செய்வதைவிடச் சமுதாயத்தையே கொலை செய்வது பாதகம். அதைச் சர்க்கார் பார்த்துக் கொண்டிருப்பதும் நியாயமில்லை.

மைசூர்
26—1—49 வரதன்

○●○

## எதிர்கால உலகம்!

23-ம் 'கல்கி'யில் தாங்கள் எழுதியிருக்கும் 'பத்திரிகை தர்மம்' என்ற தலையங்கத்தைப் பத்திரிகை அபிவிருத்தியிலும், தமிழ் நாட்டின் முன்னேற்றத்திலும் அக்கறை கொண்டவர்கள் யாவரும் மனப்பூர்வமாக வரவேற்பார்களென்று நம்புகிறேன்.

உண்மைக் கதை என்று சொல்லிக்கொண்டு பொய்க் கதைகளை, ஆபாசமான படங்களுடன், விரசமான பாஷையில் அச்சிட்டு வெளியிடுகிறார்கள். இத்தகைய பத்திரிகைகள் பெரும்பாலும் கலாசாலை மாணவர்களிடந்தான் அதிகச் செல்வாக்குப் பெற்றிருக்கின்றன. இந்நிலைமை நீடித்துக் கொண்டே போகுமானால் இன்னும் சில வருஷங்களில் வாலிப மாணவர்களின் உள்ளம் மிகக் கீழான காரியங்களில் சென்று அவர்கள் நாசமடைவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

மேலும் நமது ஒப்பற்ற தலைவர்கள் ஸ்ரீ ராஜாஜி, ஸ்ரீ நேரு, ஸ்ரீ பட்டேல் இவர்களெல்லாம் பேசும் ஒவ்வொரு கூட்டங்களிலும் "மாணவர்கள்தான் வருங்கால இந்தியாவை நிர்மாணிக்கும் நவயுகச் சிற்பிகள்" என்று சொல்லுகிறார்கள். ஆனால் மாண

வர்கள் ஆபாசப் பத்திரிகைகளில் செலுத்தும் மோகத்தைப் பார்த்தால் வருங்கால இந்தியாவை எந்த முறையில் இந்த நவயுக இந்தியர்கள் நிர்மாணிப்பார்கள் என்பதைக் கற்பனை செய்து பார்ப்பதற்குக் கூட மிகவும் பயமாக இருக்கிறது. இதே மாதிரி தான் வகுப்பு வாதப் பத்திரிகைகளும், புஸ்தகங்களும் வளர்ச்சி பெறுகின்றன. எனவே வாலிபர்களின் வருங்கால க்ஷேமத்தை முன்விட்டு மேற்கூறிய நிலைமை பற்றிச் சர்க்காரும் பொது ஜனங்களும் உடனே கவனம் செலுத்த வேண்டும்.

மதுரை
26—1—49 எஸ். கோபாலகிருஷ்ணன்

○●○

## பத்திரிகைகளும் சர்க்காரும்

23உ 'கல்கி' இதழில் வெளியான தலையங்கத்தை நான் வாசித்து மகிழ்ந்தேன்.

இப்பொழுது நாடு விடுதலை யடைந்து பத்திரிகைச் சுதந்திரம் கிடைத்துவிட்டதென்று தங்கள் இஷ்டம்போல் கன்னாபின்னாவென்று பத்திரிகைக்காரர்கள் எழுதுகிறார்கள். உண்மையில் பத்திரிகைகளுக்குச் சுதந்திரம் அவசியம்தான். ஆனால் நமக்குச் சுதந்திரம் கிடைத்துவிட்டதென்று தங்கள் மனம்போன போக்கில் எழுதுவதா? எதையும் அளவோடு எடுத்துரைக்க வேண்டும். உண்மையையும் அறிவையும் ஊட்டும் பத்திரிகைகள் ஒரு சில தமிழ்நாட்டில் உலாவுகின்றன. அறிவை வளர்க்கும் பத்திரிகைகள் ஆயிரம் தமிழ்நாட்டில் உலவ வேண்டும். அதை விடுத்துப் பேனா நுனி மழுங்கும் வரையில் சுதந்திர சர்க்காரையும், மனிதருக்குள் மாணிக்கத்தையும், மதங்களையும் வரம்பு மீறித் திட்டிக்கொண்டு நிற்கும் பத்திரிகைகள் விஷயத்தில் ஏன் சர்க்கார் தலையிடக் கூடாது?

சென்னை
25—1—49 எஸ். இராமன்

○●○

## ★ இதுவா பிரஜா பயிற்சி?

எங்களூர் நாட்டாண்மை உயர் நிலைப் பள்ளியில் மாணவர்களுக்கு, 'பிரஜா பயிற்சி' (Citizenship Training) அளிக்கப்பட்டு வருகிறது. இப்பயிற்சி நம் மாகாணத்தில் எல்லா உயர்நிலைப் பள்ளிகளிலும் நடைபெறுகிறதெனத் தெரிகிறது. இதன் நோக்கம், எதிர்கால இந்தியாவை நிர்மாணிக்கப் போகும் இன்றைய மாணவர்கள் சிறந்த ஒழுக்கமும், மேம்பாடும் சேவா உணர்ச்சியும் அடையவேண்டும் என்பதே. அரசாங்கம் இப்பயிற்சியை ஏற்படுத்தியதும் இந்நோக்கத்துடன்தான். ஆனால் அவர்கள் நோக்கத்திற்கும், இங்கு நடக்கும் பிரஜா பயிற்சிக்கும் சம்பந்தமே இல்லை எனத் தோன்றுகிறது.

மாணவர்கள் அரசியல் கட்சிகளுக்கு அடிமையாகக் கூடாது என்பது நம் தலைவர்களின் அபிப்பிராயம். ஆனால் இப் பள்ளியில் மாணவர்களுக்கு வகுத்துக் கொடுத்துள்ள பயிற்சித் திட்டமானது மாணவர்களை வலுவில் அரசியல் கட்சிகளுக்குள் புகுத்த வழி செய்கிறது. உதாரணமாக வகுப்புகளுக்கும், விளையாட்டுப் பிரிவுகளுக்கும் (Team) அரசியல் தலைவர்களின் பெயர்களை வைத்து



கண்காட்சியில் ஒரு பெண்:— பாட்டி, பார்த்தீர்களா? உங்கள் வீட்டிலேயும் இம்மாதிரி ஒரு மிஷின் வாங்கிப் போடச் சொல்லுவேன்! இட்டிலி, தோசை, காப்பி எதுவுமே இந்த மிஷின் மூலம் கைபடாமல் செய்யலாமாம்!

பாட்டி:— அதெல்லாம் முடியாது அம்மா! என் பிள்ளைக்கு அவனுடைய அகமுடையாள் கையினால் பண்ணிப் போட்டுச் சாப்பிட்டால் தான் மனதுக்குத் திருப்தியாக இருக்கும்!

---

இழிவு படுத்துகின்றனர். காங்கிரஸ் அபிமானமுள்ள மாணவர்கள் வகுப்புகளுக்குக் காந்திஜி, நேரு முதலிய பெயர்களையும், திராவிடக் கழக அபிமானமுள்ள மாணவர்கள் வகுப்புகளுக்கு அந்தக் கட்சித் தலைவர்களின் பெயர்களையும் வைக்கின்றனர். கட்சித் தலைவர்களின் பெயர் இட்ட வகுப்புகளில் அந்தந்தக் கட்சி சம்பந்தமான படங்களைச் சுவரின் ஒட்டியிருக்கிறார்கள். பெயர்களையும் வர்ணத்தால் வரைகின்றனர். தேவையில்லாத மற்றப் படங்களையும் ஒட்டி யிருக்கின்றனர்.

மாணவர்கள் கல்வியில் கவனம் செலுத்தாமல் வகுப்பை அலங்கரிப்பதாக நினைவில் கொண்டு, படங்கள் ஒட்டுவதும், காவிக் கல்லால் சுவரைப் பூசுவதும், வகுப்புக்கு முன் கோலமிடுவதும் ஆகிய தேவையற்ற காரியங்களைத் தினந்தோறும் செய்கின்றனர். மேற்படி (அவ) வேலைகளை எவ்வகுப்பு சிறந்த முறையில் செய்திருக்கிறதோ, அவ்வகுப்புக்கு ஒரு வெள்ளி கொடியைப் பரிசாக அளிக்கின்றனர். அன்று பூராவும், வெற்றிக்கொடியாக அது அவ்வகுப்பின் அலங்கரித்து இருக்கும். இவ்வாறே ஒவ்வொரு தினமும் வெற்றி அடைந்த வகுப்பின் மீளிரும். நங்கள் வகுப்பு முன்னணியில் நிற்கவேண்டும் என்று ஒவ்வொரு வகுப்பாரும் விடுமுறை நாட்களிலும் கூட இக் கைங்கரியத்தில் ஈடுபடுகிறார்கள்.

இங்கு வகுக்கப்பட்டுள்ள பிரஜா பயிற்சித் திட்டத்தினால் மாணவர்களுக்கு ஒழுக்கமோ, மேம்பாடோ, சேவா உணர்ச்சியோ உண்மையாக ஏற்படுமா? அல்லது கட்சி மனப்பான்மையும், துவேஷமும் ஏற்படுமா?

இத்திட்டத்தைப் பள்ளி நிர்வாகிகள் மாற்றி காந்திஜியின் நிர்மாணத் திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு மாணவர்களுக்கு பிரஜா பயிற்சி கொடுப்பார்களென நம்புகிறேன். நிர்மாணத் திட்ட அடிப்படையில்

# இடமாற்றம்

## அறிவிப்பு

# ஸ்ரீ நடராஜ விலாஸ்

**ஜுவல்லரி ஹால் - சிதம்பரம்**

மேற்படி கடை கட்டிடம் புதுப்பிப்பதை முன்னிட்டு வியாபாரங்களை சின்ன செட்டித் தெரு நம்பர் 16 எனது வீட்டில் 20-1-49 முதற்கொண்டு தற்காலிகமாக நான்கு மாதங்களுக்கு மாற்றப்பட்டிருக்கிறது.

செ. ரெத்தினசாமி செட்டியார்
**தங்க நகை & வெள்ளிப் பாத்திர வியாபாரிகள்**




சைபால்

எந்த சரும நோயையும், சீக்கிரமாக குணப்படுத்த வல்லது "சைபால்". கொப்புளங்கள், சொறி, சிரங்கு, படை, பரு, கடி, கால் வெடிப்பு, புண்களுக்கு ஆச்சரியமாக குணமளிக்கும் ஔஷதம்.



தயாரிப்பவர்கள் :
**சௌத் இந்தியன் மான்யுபாக்சரிங் கம்பெனி, மதுரை.**

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ் ஏஜென்ஸீஸ், பெஜவாடா; ஸ்ரீ விஜய மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி; மெஸர்ஸ். ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், மதராஸ்

# பட்டுத் துணி கெஜம் ரூ. 1-0-0



நீங்கள் எந்த இடத்திலாயினும் பட்டுத் துணியை கெஜம் 1-க்கு ரூ. 1-0-0 வீதம் வாங்க முடியுமா? நாங்கள் கடை விலையைவிட மிக மலிவான விலைக்கு சப்ளை செய்ய ஒப்புக் கொள்வோம். துணி மிகச் சிறப்பாயிருக்கும். சகல உபயோகத்திற்கும் உகந்தது. வெள்ளை அமெரிக்கன் ஸில்க் பாரசூட் முழுத் துண்டுகள் 12 (காலீஸ் ஜாயிண்ட் இன்றி ஸில்க் ஸேல் உடன் முழு பாரசூட்டும் ரூ. 12 வீதம் கிடைக்கும். பாக்கிங் இலவசம். தபாற் செலவு ரூ. 1-11-0 தனி. மூன்று முழு பாரசூட்டுகளின் அதாவது 36 (காலீஸ்) பீஸ்களின்) குறைக்கப்பட்ட விலை ரூ. 33. தபாற் செலவு ரூ. 3-15-0. முன்பெல்லாம் இதன் விலை ரொம்பவும் அதிகம். ஆனால் தற்போது ஸ்டாக்குகளைத் தீர்ப்பதற்காக மொத்த விலைப்படியே கொடுக்கத் தீர்மானித்துள்ளோம். தபாற் செலவு உள்பட மூன்று பாரசூட்டுகள் உங்கள் வீட்டில் வந்து சேர ரூ. 36-15-0 மட்டுமே செலவழிக்கிறீர்கள். குறைந்த அளவே ஸ்டாக் இருப்பதால் இன்றே ஆர்டர் செய்து பயனடையுங்கள். தாமதித்தால் ஸ்டாக் தீர்ந்து ஏமாற்றமடைய நேரிடும். அமெரிக்காவிலிருந்து இனி சப்ளை எதிர்பார்க்கப்படவில்லை.

**AMERICAN TRADING COMPANY REGD. (K. W. M.)**
**Famous Dealers of Silk Cloth, JULLUNDUR CITY**

---

ரூ. 22-8-0 பெறுமானமுள்ள ஒரு கைக் கெடியாரமும் ஒரு பவுண்டன் பேனாவும் இனாம்

## உயர்தர கைக் கெடியாரங்கள்

எல்லா கெடியாரங்களும் உயர்ந்த ரகம். ஸ்விஸ் தயாரிப்பு. உறுதியுள்ள லீவர் மெக்கானிஸம். நீடித்து உழைப்பதுடன் சரியாக மணி காட்டும். ஐந்து வருஷங்களுக்கு உத்திரவாதம். படத்தில் காட்டியிருப்பதைவிட மிகவும் அழகானவை. ஒவ்வொன்றும் ப்ளாஸ்டிக் பட்டையுடன், வெல்வெட் பெட்டியில் அமைக்கப்பட்டுள்ளது



நெ. 201 வட்ட வடிவம்

| | | | | |
|---|---|---|---|---|
| வட்டவடிவம்- க்ரோமியம் | | 17/8/- | உயர்ந்த ரகம் | 18/8 |
| 5 | ஜுவெல்கள் | 20/8/- | 5 ஜுவெல்கள் உ. ர. | 22/8/- |
| 7 | ,, | 26/- | ரோல்ட்கோல்டு | 38/- |
| 15 | ,, | 35/- | ,, ,, | 58/- |



நெ. 202 தட்டை வடிவம்

| | | | | |
|---|---|---|---|---|
| 5 | ஜுவெல்கள் | 28/- | உயர்ந்த ரகம் | 30/- |
| 5 | ,, | | ரோல்ட்கோல்டு 10 வருஷ உத்தரவாதம் | 38/- |
| 7 | ,, | 35/- | ரோல்ட்கோல்டு | 48/- |
| 15 | ,, | 50/- | ,, ,, | 58/- |



நெ. 203 வளைந்த வடிவம்

| | | | | |
|---|---|---|---|---|
| 5 | ஜுவெல்கள் க்ரோமியம் | 30/- | உயர்ந்த ரகம் | 32/- |
| 5 | ,, | | ரோல்ட்கோல்டு 10 வருஷ உத்தரவாதம் | 40/- |
| 7 | ,, க்ரோமியம் | 40/- | ரோல்ட்கோல்டு | 45/- |
| 15 | ,, ,, | 52/- | ,, ,, | 60/- |



நெ. 204 நீண்ட சதுரகோண வடிவம்

| | | | | |
|---|---|---|---|---|
| 5 | ஜுவெல்கள் க்ரோமியம் | 34/- | உயர்ந்த ரகம் | 37/- |
| 5 | ,, | | ரோல்ட்கோல்டு 10 வருஷ உத்தரவாதம் | 42/- |
| 7 | ,, க்ரோமியம் | 42/- | ரோல்ட்கோல்டு | 48/- |
| 15 | ,, ,, | 54/- | ,, ,, | 62/- |

தபாற் செலவு அணா 12 பிரத்தியேகம். ஒவ்வொரு கைக் கெடியார ஆர்டருக்கும் ஒரு அமெரிக்கன் பேனா இனாமாக அளிக்கப்படும். சேர்ந்தாற்போல் மூன்று கைக் கெடியாரங்களுக்கு ஆர்டர் செய்தால் ரூ. 22-8-0 பெறுமானமுள்ள ஒரு கைக் கெடியாரம் இனாமாக அளிக்கப்படும். அல்லது விலையில் பனிரண்டரை சத விகிதம் தள்ளுபடி செய்யப்படும்.

**STANDARD WATCH CO. - Post Box No. 11419 - CALCUTTA - 6**

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்




டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாஸனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலை கருகருவென நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளுகுளுப்பையும் அலாதி சுறுசுறுப்பை அளிக்கிறது.



**டி.எஸ்.ஆர். & கோ., கும்பகோணம்.**

மதராஸ் ஏஜண்டு:
புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைகிராப்ட்ஸ் ரோடு
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள்
& பாலக்காடுக்கு ஏஜண்டு
R. பாலபட்டாபி
( Estd. 1933 )
P. B. No. 182, கோயமுத்தூர்

# நோயுற்ற குழந்தைகளுக்குப் பல வருடங்களாக சேவை புரிந்து வருகிறது



ஜம்பியின் லிவர்க்யூர் பல்லாண்டுகளாக செய்து வரும் சேவையால் ஆயிரக் கணக்கான விலையற்ற சிறுயிர்கள் ஈரல் குலைக்கட்டி வியாதிகளிலிருந்து காப்பாற்றி மனித சமூகத்திற்கு விசேஷ நன்மை புரிந்து வருகிறது.

டாக்டர்கள் இவ் வியாதியை போக்க ஆரம்ப நிலை, கட்டி முதிர்ந்த நிலைக்கு தகுந்தவாறு 'சிம்பிள்' அல்லது 'காம்ப்ளிகேட்டட்' லிவர்க்யூர் மருந்துகளை சிபார்சு செய்து இவ் வியாதியை குணப் படுத்துகிறார்கள்.

ஜம்பியின் சிம்பிள் லிவர்க்யூர் சிறிய அளவில் கொடுத்து வர, வியாதி வராமல் தடுக்கவும், பசி, ஜீரண சக்தி விருத்தி செய்யவும் மலச்சிக்கல்களைப் போக்கி ஈரல், குலைகளை சரியானபடி வேலை செய்கிறது.

மூன்றும் ஈரல் குலைக் கட்டி நோயினால் பீடிக்கப்பட்ட குழந்தைகளின் தாய்மார்கள் திரும்பவும் கர்ப்பம் தரிக்கும் பொழுது ஜம்பியின் டானிக்கை உபயோகப் படுத்துவது நல்லது. பிறக்கப் போகும் குழந்தையின் ஈரல், குலைகள் நலமாய் ஏற்படுகிறது என்ற

ஆயுர்வேத சித்தாந்தத்தை அனுசரித்து இந்த டானிக் தயாரிக்கப் பட்டுள்ளது.



ஜம்பியின்
# லிவர்க்யூர்

ஜம்பி வெங்கடரமணய்யா அண் ஸன்ஸ்
மைலாப்பூர் மதராஸ் 4 (போன் நெ. 8139)
தெப்பகுளம் திருச்சி. பெரிய தெரு கும்பகோணம்.
பெங்களூர், பம்பாய் 4. (போன் நெ. 41593)
மற்றும்: டில்லி, கல்கத்தா.

J. 234

கிளைகள் ஆபீஸ்கள் :

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, ராயப்பேட்டை,
மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர் - ராயபுரம்

●

சென்னை மாகாணத்தின் எல்லா முக்கியமான இடங்களிலும்
பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன

●

| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 53,00,000 |
| ரிசர்வ் நிதி | ரூ. 62,00,000 |

எல்லாவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும்

என். கோபால அய்யர்,
செக்ரடரி



HPB

# தி இந்தியன் பாங்க் லிட்.

---

## இருமல், அவஸ்தை யளிக்கும் ஆஸ்துமா, மார்ச்சளி 3 நிமிஷங்களில் ஒழிக்கப்படுகின்றன

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதியுறுகிறீர்களா? அதிகமாக இருமுவதால் பிராணவஸ்தையாக இருக்கிறதா? பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், குளுமையான வஸ்துக்களையும் உணவுகளையும் சாப்பிட முடியவில்லையா?

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எந்த உபயோகித்திருப்பினும் சரி, மெண்டாகோ (Mendaco) ஓர் புதிய நம்பிக்கை அளிக்கும். ஊசி, குத்தக மருந்துகளில்லை, புகை பிடித்தலில்லை, சிகிச்சையில்லை, ஆட்டோமைஸர் தேவை இல்லை. செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு பில்லைகளை சாப்பாட்டின் போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக மறைந்து விடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ (Mendaco) இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி, கபத்தைக் கரைத்து சிரமமின்றி ஸ்வாசத்தை நிவிருத்தி செய்து முதல் நாள் இரவே நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் திடத்தையும் பெறுவீர்கள்.

### 2 வருஷங்களாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ (Mendaco) அநேகமாக உடனே சமனித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமின்றி எதிர்கால தாக்குதல் ஏற்படாது தடுக்கிறது. உதாரணமாக ஜே. மிச்செட்ஸ், ஹாமில்டன், ஒன்ட். கனடா, இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து, இறந்து விடுவார் என எதிர்பார்க்கப் பட்டது. மெண்டாகோ (Mendaco) ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்தி விட்டது. இரண்டு வருஷங்களில் அவ்வுபாதையே மீண்டும் ஏற்பட்டதில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ (Mendaco) முதல் வேலை சாப்பிட்டதுமே நேரடியாக ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ (Mendaco) அதிவிரைவில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்தரவாதத்தின் கீழ் மெண்டாகோ (Mendaco) உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ (Mendaco) சாப்பிட்ட பின் பூரண குணம் பெற்று திருப்தியளிக்காவிடில் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ (Mendaco) வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறுநாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிறது.

**Mendaco**

மெண்டாகோ

ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை நிவர்த்திக்கிறது